# ஆதிபகவனும் ஆச்சாரிய வினோபாஜீயும்.

ஆசிரியர்

ஜீவபந்து. டி. எஸ். ஸ்ரீபால்.

அறநூற் பதிப்பகம்.

ஆஸ்தான கவிஞர்

# உயர்திரு. வெ. இராமலிங்கம் பிள்ளை அவர்கள்

அன்புடன் வழங்கிய

## அணிந்துரை.

திருவாளர் ஜீவபந்து, டி. எஸ். ஸ்ரீபால் அவர்கள் இயற்றிய 'ஆதிபகவனும் ஆச்சாரியவினேபா பாவேவும்' என்ற நூலைப்படித்துமிகுந்த இன்பம் அடைந்தேன். இந்தநூலாசிரியரின் திறமை மிகவும் மெச்சத்தக்கது. பல நூல்களை வெகு நுணுக்க மாக ஆராய்ந்து தாம் கொண்ட கருத்துக்கு இசையும்படி அழகாக மேற்கோள்களை அடுக்கிக்காட்டுகிறுர்.

எல்லா உயிர்களிடத்தும் சம அன்புகாட்ட வேண்டும் என்பதும் கோல்லா விரதமே மனிதனுக்கு தலைசிறந்த அறம் என்பதும் வெகு நல்ல மேற்கோள்களுடன் மிகத்தெளிவாக இதில் சொல்லப்படுகின்றன.

மகாத்மா காந்தியடிகளுடைய அகிம்ஸா தர்மத்தையும், மற்றும் அவர்வாழ்ந்து காட்டிய ஒப்பரிய எளியவாழ்க்கையில் விளங்குகின்ற சமதர்மத்தையும், மக்கள் பின்பற்ற வேண்டும் என்பது இந்நூலின் குறிக்கோள். அத்துடன் காந்தி மகான் விட்டுப்போன காரியங்களை விடாது நடத்தி வரும் ஸ்ரீ விநோபாபாவே அவர்க ளுடைய பூமிதான இயக்கத்தைப்போற்ற வேண்டும் என்பதே இப்புத்தகத்தின் முக்கியபடிப்பினை.

ஒரு சில தனி மனிதர்களிடத்தில் பெருஞ்செல்வம் குவிந்து கிடப்பதும், விளை நிலங்களில் பெரும்பகுதி உழைப்பில்லாத ஒரு சிலருக்கே உரிமையாக இருப்பதும் ஆகிய இந்த இரண்டும்தான் மக்களுக்குள் பொருளாதார ஏற்றத்தாழ்வுகளை உண் டாக்கி சமுதாயத்தில் வளர்ந்துவரும் சச்சரவுகளுக்கெல்லாம் காரணங்களாக இருக் கின்றன என்பது நன்ருக எடுத்துக்காட்டப்படுகிறது. ஆதலின் இந்த நூல் மிக நல்ல பயனளிக்கவல்லது. இதன் நோக்கங்கள் வெற்றி பெற வேண்டுமென்று மன மாரவாழ்த்துகின்றேன்.

நாமக்கல்

**22—12—1953.** **வெ. இராமலிங்கன்.**

---

என்னுடையவும் அன்பர் ஜி. உமாபதி **M. C.** அவர்களுடையவும் வேண்டு கோளுக்கிசைந்து அறிவு சான்ற அணிந்துரை அனுப்பியுதவிய ஆஸ்தான கவிஞர் உயர்திரு. வெ இராமலிங்கம் பிள்ளை அவர்களுக்கு என் நன்றியறிதலான வணக்கம் உரித்தாகுக.

அன்பன் **T. S. ஸ்ரீபால்.**



'முத்தமிழ்க் கலா வித்துவரத்தினம்'

அமரர் அவ்வை சண்முகம் அவர்கள் நினைவாக

மதுரை காமராஜ் பல்கலைக் கழகத்துக்கு

அன்புடன் அளிக்கப்பட்டது.

**27-1-1979**

# ஆதிபகவனும்
# ஆச்சாரிய விநோபாஜீயும்



ஆசிரியர்

**ஜீவபந்து டி. எஸ். ஸ்ரீபால்**

*Financed by*

***Sri N. Simbumullji Sowcar***

## அறநூற் பதிப்பகம்

**சென்னை—1.**

பதிப்புரிமை]　　*1952*　　[விலை அணா 6

# சமர்ப்பணம்

உலகில் நிலவும் தத்துவ மனைத்தும் நன்கு உணர்ந்த பல்கலைப் புலவர்; இந்திய நாட்டின் தலை சிறந்த ஜைன சான்றோர்; சென்னை, ராஜமகேந்திரம், கும்பகோணம் முதலிய நகரங்களிலுள்ள அரசாங்கக் கல்லூரித் தத்துவப் பேராசிரியராகவும் தலைவராகவும் பணியாற்றிய அருங்குணத் தோன்றல்; பஞ்சாஸ்திகாயம், சமய சாரம் முதலிய பிராகிருத நூல்களுக்கு ஆங்கிலத்தில் அறிவு சான்ற உரை எழுதி புகழ்வாய்ந்த அண்ணல்; மேருமந்தர புராணம், நீலகேசி முதலிய பழந்தமிழ் நூல்களைப் பதிப்பித்துச் சிறந்த முகவுரைத் தந்த செம்மல்; உலகப் பொதுமறையாம் திருக்குறளுக்கு ஆங்கில வுரை எழுதி வரும் பேரறிஞர்; உலக அறிஞர் பெரு மக்களாலும் சிறப்பாகத் தமிழ் முனிவர் திரு. வி. க. அவர்களாலும் 'இணையற்ற அறிஞர்' எனப் புகழ்மாலை சூட்டப் பெற்றவர்; என் உள்ளத்து இனிக்கும் உயர்ந்தோர்; எப்பிறப்பிலும் என்னைப் பிரியாது ஆட்கொள்ளும் ஏந்தல்;

என் ஞான குரு

*உயர் திரு. ராவ்பகதூர்,*

*A.* சக்கரவர்த்தி நயினர், M. A., I. E. S. (Rtd)

*அவர்களுக்கு இந்நூலைச் சமர்ப்பிக்கின்றேன்.*

*"அறவோர் நிலையம்"*
*15–12–'52.*

T. S. ஸ்ரீபால்

இரண்டாம் பதிப்பு

# முன்னுரை

ஆச்சாரிய விநோபாஜீயின் புரட்சி யந்திரம் நாடெங்கும் சென்று வெற்றிக் கொடி நாட்டி வருகின்றது. அதுமட்டுமன்று! ஏழை மக்களும் பசியின்றி வாழ வேண்டும் என்ற நல்லெண்ணமும் இரக்க குணமும் ஆகிய விதைகளை நிலச்சுவான்தார்கள், செல்வர்கள், முதலாளிகள் ஆகியோரின் உள்ளமெனும் வயல்களிலே விதைத்துக் கொண்டு செல்லுகின்றது அப்புரட்சி யந்திரம்! அவ்வியந்திரம் தங்குதடையின்றித் தாராளமாகச் செல்ல வேண்டி ஆச்சாரிய விநோபாஜீ அஹிம்ஸை எனும் பாதையை மேற்கொண்டுள்ளார்.

உலகம் சமாதானமாகவும் அமைதியாகவும் நிலவ வேண்டுமாயின் அஹிம்ஸையும் பொருளாதார சமத்துவமும் அவசியம் என்பதைத் தற்கால அரசியல் நிபுணர்கள் நன்கு உணர்ந்து கொண்டுள்ளார்கள். காரல் மார்க்ஸின் பொது வுடமைத் தத்துவம் உலகில் பரவ ஆரம்பித்தவுடனே அரசியல் உலகில் அதிர்ச்சியும் மாறுதலும் ஏற்பட்டு வருவதை நாம் அறிகின்றோம். எனவே மகாத்மா காந்தியடிகளின் அடிச்சுவட்டைப் பின்பற்றும் ஆச்சாரிய விநோபாஜீ நமது நாட்டின் சூழ்நிலையை ஆய்ந்து அஹிம்ஸையையும் பொருளாதார சமத்துவத்தையும் பரப்ப முனைந்து நிற்கின்றார். இவ்விரு பேரறங்களும் நமது நாட்டிற்குப் புதியனவல்ல. பண்டைய பண்பாடேயாகும்.

மக்களினம் உயரிய ஒழுக்கங்களுடனும் சகோதர உணர்ச்சிகளுடனும், அமைதியுடனும் வாழ வேண்டு

மாயின் அஹிம்ஸையும் பொருளாதார சமத்துவமும் அவசியம் என்பதை எத்தனையோ ஆயிரம் ஆண்டு களுக்கு முன்னர் பகவான் விருஷப தேவர் உணர்ந்து, தாம் வகுத்த அறங்களிலே அவ்விரு பேரறங்களையும் தலையாய அறங்களாகக் குறித்துள்ளார். அதுமட்டு மன்று! தமது அற நெறியை மதம், சமயம், இனம் என்ற பெயர்களால் அமைக்காமல் **அறம்** என்றே அமைத்துள்ளார். எனவே அவ்வறம் உலகுக்கே உரிய தாகும்.

இத்தகைய சிறந்த அற நெறிகளை வகுத்தருளிய **பகவான் விருஷபதேவர்** சரித்திர காலம் கடந்தவ ராயினும் அவர்தம் வாழ்க்கை வரலாறுகள் இந்திய இலக்கியங்களிலும்—சிறப்பாக ஜைன இலக்கியங்களி லும்—நிலையான இடம் பெற்றுள்ளன. திருக்குறள் ஆசிரியரால் **ஆதிபகவன்** எனப்போற்றப்படுபவரும் இம் மாபெருந் தலைவரேயாவர். இதுபோன்ற பல அரிய உண்மைகளைத் தக்க ஆதாரங்களுடன் இந்நூலின்கண் விளக்கி யுள்ளேன்.

இந்நூலின் முதற் பதிப்பு பல தமிழ்ப் பேரறிஞர் கள், சென்னை சர்வ கலாசாலை தமிழ் வளர்ச்சிக் கழகம், (The Tamil Academy) ஆசிரியர்கள், பத்திரிகைகள், ஆகியவர்களின் பாராட்டுதலைப் பெற்றது.

சென்னை சர்வ கலாசாலை தமிழ் வளர்ச்சிக் கழகப் பிரதம ஆசிரியரும், எனது அன்பிற்கும் வணக்கத் திற்கும் உரியவருமான உயர்திரு **ம. ப. பெரியசாமி தூரன்** அவர்களிடமிருந்து 12-4-52-ஆம் தேதியிட்டக் கடிதம் ஒன்று பின்வருமாறு வந்தது.

**"தாங்கள் அனுப்பிய 'ஆதிபகவனும் ஆச்சாரிய விநோபாபாவேவும்' என்ற நூலின் இருபிரதிகள் கிடைத்தன. நன்றி. இந்நூல் 7-ஆம் பரிசுத் திட்டத்தில் கட்டுரைப் பகுதியில் சேர்க்கப்பட்டுள்ளது. இந்நூலில் இன்னும் இரு பிரதிகள் பில்லுடன் அனுப்புமாறு கேட்டுக் கொள்ளுகிறேன்."**

இக்கடிதத்தைக் கண்டதும் அளவிலாத மகிழ்ச்சியடைந்தேன். உள்ளக் களிப்பால்—உணர்ச்சி மிகுதியால்—மெய்மறந்து நின்றேன். இந்நிலை பரிசு வரும் என்ற பேராசையால் ஏற்பட்டதன்று. சர்வ கலாசாலை தமிழ் வளர்ச்சிக் கழக அறிஞர் பெருமக்களால் இந்நூல் வரவேற்கப் பெற்றது, மதிக்கப் பெற்றது என்றால் இனி பகவான் விருஷப தேவரின் பெருமை தமிழ் உலகில் நன்கு விளங்கும் என்ற நம்பிக்கையேயாகும். தமிழ் வளர்ச்சிக் கழகப் பேரறிஞர்களுக்கு எனது நன்றியும் வணக்கமும் உரித்தாகுக.

எனவே இந்நூல் இன்னும் அதிகமாகப் பரவினால் உலகம் எதிர்பார்க்கும் அஹிம்ஸையும் பொதுவுடைமைக் கொள்கையும் நமது நாட்டில் தோன்றியவை என்ற பெருமையையும், அவைகளைத் தோற்றுவித்த அரசியல் தலைவர் நமது நாட்டைச் சார்ந்தவர் என்ற உணர்ச்சியையும் பலரும் பெற்று மகிழ்வர் என்ற அவாவினால் இரண்டாம் பதிப்பாக இதனை வெளியிட முன் வந்தேன்.

இவ்விரண்டாம் பதிப்பை வெளியிடப் பொருளுதவி புரிந்தவர் தியாகராய நகர் ஜெயின் போர்டிங் கிணறு தொட்டவரும், சென்னை ஜெயின் ஹைஸ்கூலில் தனி வகுப்பறை கண்டவரும், பல பொது இடங்களிலும் ஆலயங்களிலும் விழா நாட்களில் அடியார்கட்கு இன்னமுது படைப்பவரும், பகவான் விருஷப

தேவர் அறத்தின் வழி வந்தவராகையால் எம்மதத்திலும் வித்தியாசங் கொள்ளாதவரும், தமிழ் வளர்ச்சிக்கும் மாணவர்கட்கும் ஏனையோருக்கும் உண்டியும் உறையுளும் கொடுத்து, என்றும் பொதுநலத் தொண்டில் ஈடுபடுபவருமான சென்னை திருமயிலை **N. சிம்புமல் சௌகார்** ஆவர். இப்பெரியாருக்கு எனது நன்றியறிதலான வணக்கத்தைச் செலுத்தி அன்னாரின் அறத் தொண்டு மேன்மேலும் சிறப்புற்று விளங்க வேண்டுமெனப் பிரார்த்திக்கின்றேன். இத்தகைய சிறந்த பெரியாரை அறிமுகப்படுத்தி வைத்த என் நண்பர் **K. தாரிவால் ஜீக்கும்** எனது நன்றி உரித்தாகுக. என் வேண்டுகோளுக்கிசைந்து இந்நூலிற்கு அணிந்துரை அளித்த **சென்னைப் பல் கலைக் கழகத்** தலைமைத் தமிழ்ப் பேராசிரியரும் சொல்லின் செல்வருமான உயர்திரு. **ரா. பி. சேதுப் பிள்ளை B. A; B. L.** அவர்களுக்கும், பன்மொழிப் புலவர் உயர்திரு **தெ. பொ. மீனுக்ஷி சுந்தரனர், M. A. B. L.: M. O. L.** அவர்களுக்கும் என் நன்றியறிதலான வணக்கம் என்றென்றும் உரித்தாகும். தமிழகத்தின் கலைக் கண்களாக விளங்கும் இவ்விரு பெரியார்களையும் யான் எழுமையும் மறவேன்.

என் சிற்றறிவின் துணையினல் ஆராய்ந்தெழுதிய இந்நூலினைப் பாராட்டிக் கடிதங்கள் எழுதியும், மதிப்புரை வழங்கியும், என்னை ஊக்குவித்த எல்லா அறிஞர் பெருமக்களுக்கும், **'நன்று பெரிதாகும்'** எனும் தொல்காப்பியச் சூத்திரத்தை நினைவுறுத்தி வாழ்த்துரை வழங்கிய வித்துவான் **பா. ரா. கந்தசாமி B. O. L.** அவர்களுக்கும், எனது நன்றி உரித்தாகுக.

| | |
|---|---|
| **அறநூற் பதிப்பகம்,**<br>34, சுப்பிரமணிய முதலி தெரு,<br>சென்னை, 15-12-52. | இங்ஙனம்<br>அன்பன்,<br>**T. S. ஸ்ரீபால்.** |

சென்னைப் பல்கலைக் கழகத் தலைமைத்
தமிழ்ப் பேராசிரியர்,

**சொல்லின் செல்வர். உயர்திரு. ரா. பி. சேதுப்பிள்ளை B. A; B. L.**

அவர்கள் அன்புடன் வழங்கிய

## அணிந்துரை

தமிழ்மறையாக என்றும் விளங்குவது திருக்குறள். அந்நூலில் விதித்தவாறு ஒழுகிய பெருமக்களுள் தலை சிறந்தவர் பாரத நாட்டின் தந்தை யென்று பல்லோரும் பணிந்தேற்றும் **மகாத்மா காந்தி யடிகள்.** அவர் வள்ளுவர் சொல்லிய வண்ணம், வாழ்க்கையை நடத்தியவர் என்று அறிந்தோர் சொல்லுவார். அப்பெருமகனோடு அணுக்கத் தொண்டராய்ப் பழகி அவர் அடிச்சுவடுபற்றி வாழும் சிலர்களுள் சிறந்தவர் ஆச்சாரிய வினோபாஜீ. அவர் செய்துவரும் அரும்பணி சமணசமயத்தின் அடிப்படையான கொள்கைக்கும் திருக்குறளின் தெள்ளிய கருத்துக்கும் ஒத்திருக்கும் தன்மையை "ஆதிபகவனும் ஆச்சாரிய வினோபாஜீயும்" என்ற இந்நூல் நன்கு விளக்கிக்காட்டுகின்றது. இதன் ஆசிரியர் தமிழ் நாட்டிற்குச் சொல்லாலும் செயலாலும் அரும்பணி புரிந்துவரும் **ஜீவபந்து ஸ்ரீபால்** ஆவார். கொல்லாமை என்னும் அறம் எல்லார் நெஞ்சிலும் நிலைபெற வேண்டும் என்ற ஆசையால் பல்லாண்டுகளாகத் தொண்டு செய்துவரும் இப்பெரியாரைத் தமிழகம் நன்கு அறியும். அவர்கள் இனிய எளிய தமிழ் நடையில் எழுதியுள்ள இந்நூலில் அரிய பல கருத்துக்கள் அமைந்துள்ளன.

சமண சமயத்தார் போற்றும் ஐந்து பேரறங்களுள் ஒன்று '**மிகு பொருள் விரும்பாமை**' என்பது. தேவைக்கு அதிகமாக ஒருவன் உலகப் பொருள்களைத் தொகுத்து வைத்தல் குற்றம் என்பது சமண சமயக் கொள்கை.

இக் குற்றத்தைக் கடிந்து உலகம் இயங்குமாயின் இன்று காணப்படும் சண்டை சச்சரவுகளும் பயங்கரப் புரட்சிகளும் இல்லாது ஒழியுமென்பது சொல்லாமலே அமையும். இத்தகைய கொள்கையை வெஃகாமை என்ற அதிகாரத்தில் திருவள்ளுவர் கூறியுள்ளாரென் பதைத் திறம்பட எடுத்துக் காட்டுகின்றார் இந்நூலா சிரியர். **நடுவின்றி நன்பொருள்** வெஃகுதல் குற்றம் என்று கூறுகின்ற குறளில் நன்பொருள் என்பதற்கு மிகு பொருள் என்று கொள்வது மிகப் பொருத்தமாகத் தோன்றுகிறது. திருக்குறளின் உரையாசிரியருள் இரு வர் அவ்வாறே உரை கூறியிருத்தல் இந்நூலாசிரியரின் கருத்தை வலியுறுத்துவதாகும். இக்கருத்தை ஆதரித் துத் தமிழ்ப்பெரியார் **திரு. வி. க.** அவர்கள் 'பொருளும் அருளும்' என்ற நூலில் அழகாக விளக்கியுள்ளார்கள்.

பொருளாசையின் வசப்பட்டுப் போர் முழக்கம் செய்வோர் மலிந்த இந்நாளில் அமைதியை நாடி உழைக்கும் அறிஞர்க்கு இந்நூல் சிறந்த உதவியளிக் கும். இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்னே இந் நாட்டில் சீரும் சிறப்பும் உற்று விளங்கிய **சமண சமய மும்** உலகப் பொதுமறையாகிய **திருக்குறளும்** எடுத் துரைக்கும் அருமையான கருத்தைப் போற்றும் நாளே இந்நானிலம் ஏற்றமுறும் நன்னாளாகும். எரிமலையின் சிகரத்தை நோக்கி விரைந்து ஏறும் நாட்டினர்க்குச் சமயமறிந்து நல்வழி காட்டிய நண்பர் **ஸ்ரீபால்** அவர் களுக்கு அறங் கூறும் நல்லுலகம் என்றும் நன்றி செலுத்தும் கடப்பாடுடையதாகும்.

சென்னை,
15-12-'52

(Sd) R. P. சேதுப்பிள்ளை.

உயர்திரு. பன்மொழிப்புலவர்,

**T. P. மீனுக்ஷி சுந்தரனுர், M.A. B.L.; M.O.L.**

அவர்கள் அன்புடன் வழங்கிய

## சிறப்புரை.

திரு. **ஸ்ரீபால்** அவர்கள் அருளறத்தினைத் தமிழ் நாட்டில் பரப்பி வருவதனை யாவரும் அறிவர். வேண்டியதற்குமேல் பொருளை ஒருவன் வைத்திருப்பதும் அருளறத்திற்கு மாருகும். வெஃகாமை என்பதனை வள்ளுவர் வற்புறுத்திக் கூறியது இதனுலேயே ஆம். **இடபதேவர்** காலத்திலிருந்து போற்றப்பட்டு வந்த இந்த அருளறத்தினை இன்று **காந்தீயம்** என்ற பொருளாதாரக் கொள்கையாக உலகம் போற்றி வருகிறது. ஆச்சாரிய வினேபாபாவே இதனைச் சாம்ய யோகம் என்ற பெயரால் பரப்பிக்கொண்டு உலகம் போற்றும் பூமியக்ஞம் ஒன்றை இந்திய மாபெருவேள்வியாக வளர்த்து வருகின்ருர். இந்த உண்மைகளை எல்லாம் நண்பர் திரு. ஸ்ரீபால் அவர்கள் நல்ல தமிழில் எளிய நடையில் விளக்குகின்ருர். தமிழ்ப் பெரியார் **திரு. வி. க.** அவர்கள் அருளிச் செய்த **"அருகன் அருகே"** என்ற திருப்பாடலை யொட்டி இந்த நூல் செல்வது மக்கள் மனத்தினைக் கவர்கிறது.

இந்த நூல் பரவுவதோடு கருத்தும் பரவி நாட்டினை உய்விக்குமாக.

சென்னை, **(*Sd*) தெ. பொ. மீனுட்சிசுந்தரன்.**

13—6—52.

இந்நூலை ஆழ்ந்து படித்து இதன் கருத்தில் ஈடுபட்ட

**வித்துவான் பா. ரா. கந்தசாமி, B. O. L.**

அவர்கள் உளங்கனிந்தனுப்பிய

## வாழ்த்துரை

பகுத்தறிவுப் பொதுவுடைமை யருள் ஒழுக்கம்
பழந்தமிழர் பெருநெறியை உலகம் உய்ய
வகுத்தருளும் வாலறிவன் தமிழ்க்கு மூல
வரிவடிவம் அமைத்திட்டோன் செந்நாப் போதார்
பகுத்த பழந் தமிழ் மறைக்கு மூலன் ஆதி
பகவனெனும் மெய்யுரையை ஐயம் நீங்கத்
தொகுத்துரைத்த அன்புருவன் உயிர்க்குத் தோழன்
தூய தமிழ் ஸ்ரீபாலென் சீலன் வாழி!

இருள்நிறைந்த நெஞ்சினராய் உயிர்செ குத்தும்
இன்பநெறி யென்று புலை வேள்வி வேட்டும்
மருள்நிறைந்த வழியுழலும் மாந்தர் தேற
மதிக்கினிய மெய்யொழுக்க மாட்சி சான்ற
அருள்நெறியை முதன்முதலில் உலகுக் கீந்த
அண்ணல் எவன் அவன் ஆதி பகவன் என்னும்
தெருள்நிறைந்த மொழிபுகன்று தமிழர்மாட்சித்
திறம்விளக்கும் ஸ்ரீபால் நீ சிறந்து வாழி!

தமிழ் ஆசிரியர்,
K. K. High School
Velur (Salem)

*(Sd.)* பா. ரா. கந்தசாமி, B. O. L.
27—7—52.

### Adhi Bhagavanum Acharya Vinobha Bhavevum.

"Designed for the general reader this well-planned booklet gives a clear and interesting account of the valorous part played by Vinobha Bhave in the cause of the down-trodden. These essays reveal accute Judgment of trends and traditions and offer sane advice on the dilemmas facing man in and out of society. Here is an attempt to tell the story of Vinobha Bhave, but in rather high-flown language, and to present the whole of his ideas and ideals. Containing as it does much unusual information, the booklet gives a sociological panorama from an educational point of view and is both readable and percipient, containing much fresh biographical material. It is also amply documented and informative."

'Indian Express' 6—4—1952.

# ஆதிபகவனும்

# ஆச்சாரிய வினேபாஜீயும்

மகாத்மா காந்தியடிகள் அஹிம்சையை அரசியலிற் புகுத்திய இரகசியம் இப்பொழுதுதான் உருவாகி வருகிறது. அதன் தத்துவத்தில் அடங்கியுள்ள அரசியற் கொள்கையைப் பெரும்பாலோர் நன்கு புரிந்து கொள்ளவில்லை. அதனுல் மகாத்மாவின் அஹிம்சைக் கொள்கையை ஏளனஞ் செய்தவர்களும், ஏற்றுக்கொள்ளாதவர்களும் உண்டு. எனினும், மகாத்மா சிறிதுந் தளர்ச்சியுருமல் தாம் கண்ட உண்மையை உலகுக்கு தெரிவிக்க முனைந்து நின்ருர். அவர் தம் எண்ணம் ஈடேறுமுன் பாவி கோட்ஸே அவரைப் பலி கொண்டான். எதிர்கால நிலைமைகளை நன்குணர்ந்த நமது மகாத்மா தமது அந்தரங்கக் கொள்கைகளைத் தம்மகத்தே மட்டும் பதிவு செய்து கொண்டாரல்லர். தமக்குப் பெரிதும் நம்பிக்கையான ஓர் ஒப்பற்ற தியாகியின் உள்ளத்திலேயும் பதிவுசெய்து வைத்தார். அத்தியாகி தான் இன்று உலகமெலாம் பிரமிக்கும் வண்ணம் நிலப் பங்கீடு செய்துவரும் நமது **ஆச்சாரிய வினேபாபாவே**. உலக சரித்திரத்தை நோக்கும்போது இவ்வுலகம் அவ்வப்போது அமைப்பிலும் நாகரிகத்திலும், கொள்கைகளிலும் மாறுதல் அடைந்து வந்திருப்பதை நாம் காண்

கிறேம். நாடு கடலானதும் உண்டு. கடல் நாடானதும் உண்டு.

இத்தகைய இயற்கைச் சூழலின் வயப்பட்டு நமது நாடு ஒரு காலத்தில் சீர்குலைந்திருந்தது. அந்நிலையையே போகபூமி கர்மபூமியாக மாறிற்றெனப் புராணங்கள் கூறுகின்றன. அது சமயம் மக்களெல்லாம் மாக்களாகவே விளங்கினர். நன்மை தீமை என்ற பாகுபாடே இல்லாமலிருந்தது. உணவுக்கும், உடைக்கும், வழியின்றி அலைந்தனர். சமைத்துண்ண வகைதெரியாமல் பச்சைக் காய்களையும் இலைகளையும் அப்படியே புசித்து வந்தனர். பொதுவாக, சமுதாய அமைப்பே யின்றி மனம்போன போக்கில் திரிந்தனர். *இந்நிலையில் **'நாபி,** என்ற மன்னருக்கும், (தலைவர்) **மருதேவி** என்ற அரசிக்கும் ஓர் ஆண் மகவு பிறந்தது. அதற்கு **'விருஷபதேவர்'** எனப் பெயரிட்டனர். அம்மகவு செல்வாக்குடன் வளர்க்கப்பட்டு வந்தது. **விருஷப தேவர்** சிறு வயதிலிருந்தே அறிவுடன் விளங்கினார். காளைப்பருவம் அடைந்ததும் நாட்டின் நிலையில் அக்கறை கொண்டார். மக்களின் பரிதாபகரமான நிலையைக் கண்டு வருந்தினார். அவர்கள் அறியாமையில் மூழ்கி இருப்பதுடன் தொழிலொன்றும் இல்லாமல் திரிவதைக் கண்டு, அந்நிலையை மாற்றச் சிந்தனை செய்தார். சிந்தனையில் பல திறப்பட்ட திட்டங்கள் தோன்றின. கடைசியாக ஒரு முடிவுக்கு வந்தார். முதலில் மக்களின் வாழ்க்கை முறையையும் அறிவையும் வளர்க்கவேண்டும் என அறிந்தார். மக்கள் எவ்வளவுக்கெவ்வளவு உயர்ந்த கல்வியறிவு பெறுகின்றார்களோ அவ்வளவுக்கவ்வளவு அவர்கள் வாழ்க்கை நலமும் உயர்ந்து நிற்கும் என்பதை

* ஆதி புராணம். மகா புராணம் பார்க்க.

யறிந்து, மக்களுக்குக் கல்வியைப்பரப்ப *அகர முதலாகிய எழுத்துக்களையும், ஒன்று முதலாகிய எண்களையுந்தோற்று வித்தார். தொழில் வளர்ச்சிக்காக வாள், வரைவு, உழவு, வாணிபம், சிற்பம், கல்வி, ஆகிய அறு தொழில்களையுங் கற்பித்தார். மக்கள் அனைவரும் குடும்பம் குடும்பமாகச் சேர்ந்து வாழவும், தொழில்களைச் செய்யவும், கிராமங் களையும் நகரங்களையும் அவற்றில் வீடுகளையும் தோட் டங்களையும், ஏரிகளையுங் குளங்களையும், புன்செய் நன் செய் நிலங்களையும் நாடெங்கும் அமையவும் வகைசெய் தார். அதுமட்டுமல்ல, மக்கள் வாழ்க்கையைச் செம் மைப் படுத்தவேண்டிப் பல சட்ட திட்டங்களையும், இல்லறம் துறவறம் ஆகிய இரு பேரறங்களையும் வகுத் தார். இவ்வாறு பல்வேறு திட்டங்களுடன் ஒரு புது சமுதாயத்தையே தோற்றுவித்தார்.

## அறத்தின் தோற்றம்

பகவான் விருஷபதேவர், தாம் தொகுத்த திட்டங்களை யும் கொள்கைகளையும், தம் பெயராலோ மதம், சமயம் என்ற பெயராலோ அழைக்காமல், பொதுவாக அவை களை 'அறம்' என்றே அழைத்தார். இவ்வறநெறியில் உலகியல், அருளியல், பொருளியல், அறிவியல் ஆகிய

---

* Dr. N. N. Basu—"Probably Rsabhadeva was the first to discover the art of writing. He seems to have invented the Brahmi script for the propagation of Brahma-Vidya, and that is why he came to be known as the 8th Avatara. He was born to Marudevi, the queen of the Indian king Nabhi-raja and is mentioned in the Bhagawata as the 8th of the 22 Avataras".

Hindi Viswakosa, vol. I. p. 64 and vol. III, p. 444.

உயரிய கொள்கைகள் அடங்கியிருந்தமையால் அவ்வறிவியக்கக் கொள்கைகளையே முதல் நூலாக உலகம் ஏற்றுக் கொண்டது.

இன்று நமக்குக் கிடைத்துள்ள பண்டைய நூல்களாகிய தொல்காப்பியம், திருக்குறள், சீவக சிந்தாமணி, சிலப்பதிகாரம், சூளாமணி, நாலடியார், பெருங்கதை, மேருமந்தர புராணம் நீலகேசி, ஜீவசம்போதனை. நன்னூல் போன்ற நூல்கள் எல்லாம், **அறம், பொருள், இன்பம், வீடு** என்ற கொள்கைகளையே வற்புறுத்திக் கூறுகின்றன. இவ்வாறு அறத்தினை வற்புறுத்திக் கூறும் நூல்கள் யாவும் **பகவான் விருஷப தேவர்** வழி வந்தவை. இவ்வுண்மையைத் தொல்காப்பியர்,

"வினையின் நீங்கி விளங்கிய அறிவின்
முனைவன் கண்டது முதனூலாகும்"

எனப் போற்றியுள்ளார்.

"பூமலிய சோகினிழற் பொலிந்த வெம்மடிகண் முன்னாள்
ஏமமா முதனூல் சொல்ல"

என சூடாமணி நிகண்டாசிரியர் மண்டல புருடரும் விளக்கியுள்ளார்.

யாப்பருங்கலவிருத்தி உரையாசிரியர், முதல் நூல் என்பது,

"குற்றங்கெடுத்து முற்றவுணர்ந்த
நற்றவத்தோன் சொற்றதாகும்"

எனப் பேசுகின்றார்.

"**ஆதிவேதம் பயந்தோய் நீ;** அலர்
**பெய்மாரியமைந்தோய் நீ;**

நீதி நெறியை யுணர்ந்தோய் நீ;
நிகரில் காட்சிக்கிறையோய் நீ''.

என சீவகசிந்தாமணி ஆசிரியர் திருத்தக்க தேவரும்,

''ஆதிவேதத்து நாதன் புருவிந்த வுலகமேத்த
நீதி மாதவத்தைத் தாங்கி''

என மேருமந்தர புராண ஆசிரியரும்

சங்ககாலப் புலவர்களில் பெரும்பாலோரும் இவ்வறத்தின் திறனையும், தோற்றுவித்தத் தனிப்பெருந் தலைவனையும் ஆங்காங்கு விளக்கிப் புகழ்கின்றார்கள். அதுமட்டுமல்ல! 'திருவறம்' எனப் பல நூல்களில் பெருமையுடன் பேசப்படுகின்றது.

'' திங்கள் மும்மாரி பெய்க திருவறம் வளர்க செங்கோல்
நன்கினி தரசனாள்க...''

எனச் சீவகசிந்தாமணியிலும்,

'' விரையார் மலர்மிசை வருவார் திருவறம் விழைவார்''

எனத் திருக்கலம்பகத்திலும்,

'' திருவற நெறியது செவ்விகாண்மினே''

என யசோதர காவியத்திலும்,

''முக்குடை நீழல் மணிச்சாமரை வீசவுடன்
மூவுலகும் பரவத்தீவினை போயகலத்
திக்குடையாடையுடன் தாமரைமேல் வருவார்
திருவற மல்லது வேறொரு பொருளுங்கருதேன்''

எனத் தோத்திரத் திரட்டிலும்,

'' அரியது திருவற மல்ல தில்லையேல்''

என மேருமந்தர புராணத்திலும் இதுபற்றிக் காணலாம். இத்திருவறத்தின் தலையாய அறமே அஹிம்ஸா

பரமோ தர்ம: என்பது. அறம் என்ருல், 'ஐயமிடுதல்' என்ற கொள்கையில் பேசுவோரும் உண்டு. ஆனுல் பகவான் விருஷபதேவர் வகுத்த அறம் ஒழுக்கத்தை அடிப்படையாகக் கொண்டது. உயிர்கட்கு அரண் செய்வது.

"மெய்ப்பொருள் காட்டியுயிர்கட்கரணுகித்
துக்கங்கெடுப்பது நூல்"

என்ற அருங்கலச்செப்பின் இலக்கணப்படி அமைந்தது. அதனுற்ருன் நீலகேசி ஆசிரியர்

"நல்லார் வணங்கப்படுவான் பிறப்பாதி நான்கும்
இல்லான் உயிர்கட்கு இடர் தீர்த்து
உயரின்பமாக்கும் சொல்லான்"

எனவும், திருநூற்றந்தாதி ஆசிரியர்

"மறமே முனிந்து மயிலாபுரிநின்று மன்னுயிர்கட்கு
அறமே பொழியும் அருட் கொண்டலே........."

எனவும், மேருமந்தர புராண ஆசிரியர்

"தோன்றிமாய்ந்துலக மூன்றிற்றுயரெய்து
முயிர்கள் தம்மை
ஈன்றதாய் போல வோம்பியின்பத்துளிருத்தி நாதன்
மூன்றுலகிற்குமாக்கி முடிவிலாத் தன்மைநல்கும்
ஆன்ற நல்லறத்தைப்போலும் அரியதொன்
றில்லையென்ருன்"

எனவும் துதித்துள்ளார்கள். இவை போன்ற அற நூல்கள் பலவற்றிலும் காணலாம். இதற்குச் சான்று திருக்குறள் அறத்துப்பால் ஒன்றே சாலும். சிறப்பாகக் கூறுமிடத்து இவ்வறம், கொல்லாமை, பொய்யாமை, கள்ளாமை, பிறர்மனைநயவாமை, மிகு பொருள் விரும்பாமை, என ஐந்தில் அடங்கும்.

"பெரியகொலை பொய்களவொடு காமம்
பொருள் வரைதலோ டைந்து."

என்ற அருங்கலச் செப்பின் அறிவுரை நமது கொள்கையை உறுதிப்படுத்துகிறது. எனவே, மக்கள் வாழ்க்கையை மாண்புறச் செய்யும் இத்திருவறத்தினையே மெய்ப்பொருள் எனக்கொண்டனர்.

"எப்பொருள் யார் யார் வாய்க்கேட்பினும்
அப்பொருள் மெய்ப்பொருள் காண்பது அறிவு"

—எனக் குறளும்

மெய்ப்பொருள் தேறுதல் நற்காட்சியென்றுரைப்பர்
எப்பொருளுங் கண்டுணர்ந்தார்

என அருங்கலச்செப்பும் நவில்வதையும் ஓர்க.

எனவே, இம் மெய்ப்பொருளின் தலையாய அறமாகிய அஹிம்ஸையையும் அதனைத் தோற்றுவித்த அறிவனையும் அறிந்தோம். இனி, அஹிம்ஸையின் தன்மையை ஆராய்வோம்.

## அஹிம்ஸையின் தத்துவம்

அஹிம்ஸை என்றால், பிற உயிர்களை ஹிம்சை செய்யாமலிருப்பது என்ற ஒரே பொருளால் பெரும்பாலோர் நோக்குகின்றனர். அஃது உண்மையேயாயினும், அதன் உட்பொருள்களை ஆராய்ந்தால் நம்மை இன்ப வெள்ளத்தில் இழுத்துச் செல்லும். அஹிம்ஸையும் அன்பும் ஒன்றையொன்று பற்றி நிற்பனவாகும். அஹிம்ஸையின் வழியில்தான் மற்ற அனைத்தும் அமையும். அஹிம்ஸையின் அடிப்படை தன்னைப்போல் பிறரை நோக்கலும், பிறருக்கு வருந் துன்பத்தைத்

தமக்கு வருவதாக எண்ணி அத் துன்பத்தை நீக்க முய லுதலுமாம். அவ்வாறு இல்லையேல் அவன் வாழ்வதி னும் சாவதே மேல்.

"இனியார்தம் நெஞ்சத்து நோய் உரைப்ப அந்நோய்
தணியாத உள்ளம் உடையார்—மணிவரன்றி
வீழும் அருவி விறன்மலை நன்னாட!
வாழ்வின் வரைபாய்தல் நன்று."

என்பது நாலடியார்.

எனவே, அஹிம்ஸையை அறிதல் வேண்டுமாயின், பிறர் நோயெல்லாம் தன்னோய் போல் போற்றவேண் டும். அதனாற்றான் திருக்குறளில் தேவர்,

"அறிவினான் ஆகுவதுண்டோ பிறிதின்நோய்
தந்நோய்போல் போற்றாக் கடை." —எனவும்

"தன்னுயிர் நீப்பினும் செய்யற்க தான்பிறிது
இன்னுயிர் நீக்கும் வினை." —எனவும்

**திருத்தக்கதேவர்** சீவகசிந்தாமணியில்,

"தன்னுயிர் தான்பரிந் தோம்பு மாறுபோல்
மன்னுயிர் வைகலும் ஓம்பி வாழுமேல்"

எனவும், **தோலாமொழித் தேவர்** சூளாமணியில்,

"மன்னுயிர் வருத்தங்கண்டும் வாழ்வதே வலிக்குமாயின்
அன்னவன் ஆண்மையாவ தலிபெற்ற அழகுபோலாம்"

எனவும் கூறியுள்ளார்கள். எனவே, இத்தகைய உயரிய பண்புகளைக் கொண்ட அஹிம்ஸையின் வழி யில் மக்கள் நின்றால், உலகெங்கும் **சகோதர உணர்ச்சியும், தன்னலமின்மையும், பிற உயிர்கள்பால் அன்பும்,** இயல்பா கவே வளர்ந்தோங்கும். ஆகவே, **பகவான் விருஷபதேவர்,** மக்கள் சமுதாயம் அனைத்தும் ஒரே குடும்பம்போல்

ஒற்றுமையும் அன்பும் பூண்டு வாழவேண்டும் என்ற காரணத்திற்காகவே, மக்களிலே **உயர்வு தாழ்வுகளேயோ, சாதி சமயங்களேயோ** கற்பிக்காமல், அஹிம்ஸையை அடிப்படையாகக் கொண்ட **அறத்தினேயே** அருளினர். இதனேயே,

**"யாதும் ஊரே யாவரும் கேளிர்!"**

என்ருர் புறநானூற்றிலே **கணியன் பூங்குன்றனர்.**

வகுப்புவாதமும் சமயவெறியும் சாதிப்பூசலும் அணுகுண்டு முழக்கமும் தலைவிரித்தாடும் இந்த இருபதாம் நூற்ருண்டில், உலகெங்கும் சமாதான நிலையை உண்டாக்கவே **மகாத்மா காந்தியடிகள் பகவான் விருஷபதேவர்** கண்ட **அஹிம்சா** தருமத்தை அரசியலிலே புகுத்தினர்.

## மிகுபொருள் விரும்பாமை

"சோலைதாழ் பிண்டிக்கீழ்ச் சூழ்ந்தவர்தஞ்
சொன் முறையான்
**மனையறமுந் துறவறமும்** மண்ணவர்க்கும்
விண்ணவர்க்கும்
வினையறுக்கும் வகைதெரிந்து வீடொடு
கட்டிவை யுரைத்த
தொன்மைசால் மிகுகுணத்தெம் துறவரசைத்
தொழுதேத்த
நன்மைசால் வீடெய்து மாறு"

என யாப்பருங்கலக்காரிகை உரையாசிரியர் குணசாகரர் மேற்கோளாகக் காட்டியுள்ளார். இது போன்று பகவான் **விருஷப தேவரையும்** அவர் வகுத்த அற நெறிகளையும் போற்றிப் புகழ்வதைத் தமிழ் இலக்கியங்களிலும் வடமொழி இலக்கியங்களிலுங் காணலாம்.

**பகவான் விருஷபதேவர்** அருளிய ஐம்பெரும் அறங்களிலே, **மிகுபொருள் விரும்பாமை** ஒன்று என்பதை முன்னரே அறிந்துள்ளோம். மக்கள் சமுதாயம் சமாதானத்துடனும் சகோதர உணர்ச்சியுடனும் வாழ அஹிம்ஸா தருமம் எவ்வளவு இன்றியமையாததோ, அவ்வளவு இன்றியமையாதது மிகுபொருள் விரும்பாமை என்ற கொள்கையும். தன் தேவைக்கு மேலான பெரும் பொருளை ஒருவர் பதுக்கிவைத்திருந்தால் அது பிறருடைய வாழ்க்கையைப் பாதிக்கும். ஆகவே, அவ்விழி செயல் மனித சமூகத்திற்கே துரோகம் செய்த குற்றமும் பாவமும் ஆகும். ஏன்! அது களவைவிட எவ்விதத்திலும் குறைந்ததுமல்ல. எனவே, விருஷபதேவர் **அஹிம்ஸையும் மிகுபொருள் வெஃகாமையையும்** உலகிற்கே தலைசிறந்த அறங்களாகத் தொகுத்தளித்தார்.

திருக்கலம்பக ஆசிரியர் இல்லறத்தாருக்குரிய கொள்கைகளை விளக்கும்போது,

"விரையார் மலர்மிசை வருவார் திருவறம் விழைவார்
கொலைவினை விழையார் பொய்
யுரையார் களவினையொழுகார் பிறர் மனையுவவார்
மிகுபொருள் உவவார் வெஞ்
சுரையா லுணர்வினை யழியா ரழிதசைதுவ்வார்
விடமென வெவ்வாறும்
புரையார் நறவினை நுகரார் இரவுணல் புகழார்
குரவரை இகழாரே" என்றும்,

அருங்கலச்செப்பு ஆசிரியர்,

"பொருள் வரைந்தாசைச்சுருக்கி யேவாமை
யிருள் தீர்ந்தார்க்கைந்தாம்வதம்" என்றும்,

சீவக சிந்தாமணி ஆசிரியர்,

தெருளிற்பொருள் வானுலகமேறுதற்குச் செம்பொன்
இருளில் படுகால் புகழ்வித்தில்லை யெனினெல்லா
அருளுநக வையநக வைம்பொறியும் நையப்
பொருளுநக வீட்டும்பொருள்யாதும் பொருளன்றே''

என்றும்,

மற்ருேரிடத்தில்

''மல்லன மலையனைய மாதவரை வைதுரைக்கும்
பல்லவரேயன்றிப் பகுத்துணப் பாவிகளும்'' என்றும்,

நீலகேசி ஆசிரியர்.

''கோறல் பொய்த்தல்கொடுங்களவு நீக்கிப்
பிறர் மனை கண்மேற்
சேறலின்றிச் செழும்பொருள்மேற்
சென்றசிந்தையினை ஆறுகிற்பின்......என்றும்

யசோதரகாவிய ஆசிரியர்

''பெருகியகொலையும் பொய்யும் களவொடு பிறன்
மனைக்கண்
தெரிவிலாச் செலவும் சிந்தை பொருள் வயிற்றிருகுபற்றும்
மருவிய மனத்து மீட்சி வதமிவை யைந்தோ டொன்றி
ஒருவின புலைசுதேன்கள் ஒழுகுத லொழுக்கமென்ருன்''

என்றும்,

மேருமந்தர புராணத்தில்,

''பொய் கொலை களவு காமப் புலை சுதேன் கள்ளகற்றி
மெய்யுறத் திசையினேடு பொருள் வரைந்து'' என்றும்,

விளக்கியுள்ளார்கள்.

இதனுல் மிகுபொருள் விரும்பாமை இல்லறத்தாருக்குரிய அறங்களில் ஒன்ருகிறது. பொருளுடையோர் பிறருக்கு உதவி செய்தல் வேண்டும் என்னும் கோள்

கையைப் பொதுவாக எல்லாரும் கூறுகின்றாராயினும் **பகவான் விருஷப தேவர்** அறம், பொருளைத் தேவைக்கு மேலாக வைத்திருத்தலாகா தென்பதாகும்.

## வெஃகாமையும் திருக்குறளும்

கொல்லாமையும், மிகுபொருள் விரும்பாமையுமே தலை சிறந்த அறங்களென்பதைத் திருக்குறள் ஆசிரியர்,

> **"பகுத்துண்டு பல்லுயிர் ஓம்புதல் நூலோர்**
> **தொகுத்தவற்று ளெல்லாந் தலை"**

என, அழகாக விளக்குகின்றார். அதுமட்டுமல்ல! **"நூலோர்,"** என்னுங் குறிப்பால் மேலே கூறிய இரு அறங்களையும் முதன்முதல் தொகுத்தளித்த விருஷப தேவரின் வரலாற்றை வெளியிட்டு, நம்மை இன்பக் கடலில் ஆழ்த்துகின்றார். திருக்குறளாசிரியர் இக்குறளிலே மிகுபொருள் வெஃகாமையை நன்கு விளக்கியுள்ளார். பகுத்துண்ணல் என்பது தம்மிடத்திலுள்ள மிகுதிப் பொருள்களைப் பதுக்கி வையாமல் பலருக்கும் பயன்படுமாறு தமது பொருள் வருவாயை அளவு படுத்திக்கொண்டு எளிய வாழ்க்கையை நடத்தி வர வேண்டுமென்பதேயாகும். இதனால் பலருக்கும் பொருளீட்டும் வாய்ப்பும், வாழ்க்கையை இன்பகரமாய் நடத்திக்கொள்ள வழியும் ஏற்படும். இவ்வுயரிய பொருளாதாரத் தத்துவத்தை வற்புறுத்தவே திருக்குறளாசிரியர் **தேவர், மிகுபொருள் வெஃகாமை** என ஒரு அதிகாரத்தையே அமைத்துள்ளார். ஆனால் இன்று வெஃகாமை, எனக் காணப்படுவது பிற்காலத்திருத்தமேயாகும். மக்கள் **வாழ்க்கை** நலத்தைச் சிறிதும்

பொருட்படுத்தாத சமயவெறி வெஃகாமை என்ருல் பிறர்பொருளே அபகரியாமை எனப் பொருள்கூறுமாறு செய்து, மிகுபொருள் விரும்பாமை யென்னும் பொதுவுடைமைத் தத்துவத்தை அறிஞர்களின் அறிவிற்கும், எட்டவொட்டாமற் செய்து விட்டது. எனினும் சிந்தனைச் செல்வர்கள் கள்ளாமை என்னும் அதிகாரம் இருக்கையில், பிறர் பொருளே அபகரியாமை என ஓர் அதிகாரம் எற்றுக்கெனச் சிந்தியாமலு மில்லே. தமிழ் நாட்டின் துரதிர்ஷ்டம் திருக்குறளுக்குத் **தருமர்** போன்ற பேராசிரியர்களின் உரைகள் மறைந்து விட்டமையால் பரிமேலழகரின் உரையே இன்று பெரும்பாலுங் கையாளப்படுகிறது. பரிமேலழகரும் மணக்குடவரும் வெஃகாமை என்ற அதிகாரத்தைப் பிறர் பொருள் அபகரியாமை, பிறர் பொருள் விரும்பாமை என்று கூறி மாறுபடுகின்ருர்களே யன்றி, பிறர் பொருள் என்பதில் இருவருக்கும் கருத்து வேற்றுமை இல்லே. இவை யிரண்டும் குறளாசிரியர் கருத்துக்கு மாறுபட்டவை. குறளாசிரியர் தமது கருத்தை முதற் குறளிலேயே விளக்கியுள்ளார்.

"நடுவின்றி நன்பொருள் வெஃகின் குடிபொன்றிக்
குற்றமும் ஆங்கே தரும்"

என்பதில் நன்பொருள் என்பதற்கு நல்ல பொருள் என்றும் மிகுதிப்பொருள் என்றும் பொருள் படும். நல்ல என்ருல் மிகுதி எனும் பொருளே, **நல்ல மழை பெய்தது. நன்ருக அடித்து விட்டான்** என்ற உலகியல் வழக்கிலே காணலாம். தொல்காப்பியத்திலும் "நன்று பெரிதாகும்" என்பது சூத்ரம். மேலும் "**நடுவின்றி நன்பொருள்**" என்பதனுல் இங்கே நடுநிலேமை யில்லாமல் மிகுதிப் பொரு

ளைப் பதுக்கி வைப்பாராயின் என்பது தான் பொருந்தும். பரிமேலழகர் கூற்றுப்படி பிறருடைய நல்ல பொருளை வெஃகுதல் கூடாதென்ருல் கெட்டபொருளை விரும்பலாம் என்ருகிறது. ஆகவே அவருடைய உரை சமய சார்பற்ற பகவான் **விருஷப தேவரின்** அறநெறிக்கு முறணானது. அவர், குறளைச் சமய நூலாக மாற்ற வேண்டி இவ்வதிகாரத்தின் தலைப்பைத் திருத்தித் தவருன கருத்தைப் பரப்பி விட்டார். சமீபகாலத்தில் தருமபுர ஆதினத்தாரால் வெளி யிடப்பட்ட "**திருக்குறள் உரைவளம்**" என்ற நூலில் பரிமேலழகருக்கு முற்பட்டவர்களான மணக்குடவரும் காளிங்கரும் நன்பொருள் என்பதற்கு மிக்க பொருள் என்றே உரை எழுதியுள்ளதைக் காணலாம். இதனைப் பிறர்பொருள் விரும்பாமை எனப் பொருள் கொண்டால் மிகு பொருள் விரும்பாமை என்னும் பொருளாதார சமத்துவம் மறைந்து விடுகிறது. எனவே, குறளாசிரியர் மிகு பொருள் வெஃகாமை என்ற அதிகாரத்தின் வாயிலாக மிகு பொருள் விரும்பாமையையே வற்புறுத்திக் கூறுகின்ருர் என்பது துணிபு. இன்றைய நிலைமையை நோக்கும்போது மிகு பொருள் விரும்பாமை என்ற கொள்கை எவ்வளவு அவசியம் என்பது புலனுகின்றதன்ருே? தங்கள் கௌரவத்திற்கும் ஆடம்பரவாழ்க்கைக்கும் ஆசைப்பட்டுப் பெரும்பாலான வியாபாரிகள் கள்ளச் சந்தைகளை பெருக்கிக் கொள்ளை லாபங்கள் பெற்று வருகின்றனர். இதனுல் பலர் பாதிக்கப்படுவதைச் சிறிதும் பொருட்படுத்தாத இப்பெரும் பொருளாளர்கள் உரிமையின் பெயரால் தேவைக்கு மேலான பொருளைத் திரட்டிக் குவிக்கின்றனர். அவ்வாறு உரிமை பெற்றிருந்தாலும்

அம்மிருதிப் பொருள் பிறருடையதே என்பது **தேவர்** கருத்து. எனவே மக்கள் நல மேம்பாட்டிற்குரிய ஐம் பெரும் அறங்களில் மிகு பொருள் வெஃகாமை ஒன்று என்பதையும் அவ்வறத்தை மேற்கொண்டு வாழ் வோரே அறிவுடையார் என்பதையும் விளக்கவே திருக் குறளாசிரியர் **தேவர்,**

**"அறனறிந்து வெஃகா அறிவுடையார்"**

எனப் பாராட்டியுள்ளார். பகவான் **விருஷப தேவர்** அருளிய திருவறங்களைக் கொண்ட **தேவர் திருக்குறளைப்** படித்துத் தெளிவும் அறிவும் அமையப் பெற்ற **நீலகேசி** ஆசிரியர் தமது அவை அடக்கத்தில்

**"தேவன் உரைப்பத் தெளிந்தேன் பிற்றெளிந்த தெல்லாம்**
மாவென்று கொண்டேன்...........

எனப் பெருமையுடன் போற்றுகின்றார். அதுபோன்றே அதன் உரையாசிரியர் சமயதிவாகர மாமுனிவரும் திருக் குறளை மேற்கோளாகக் குறிப்பிடும்போதெல்லாம் "அஃது **எம்மோத்தாதலால்**" என உரிமை கொண்டு பாராட்டி மகிழ்கின்றார். எனவே திருக்குறள் ஆசிரியர் பகவான் விருஷப தேவர் வகுத்த அறங்களையே திருக் குறளாக இயற்றியுள்ளார் என்பது தெளிவு. இங்கே திருக்குறளாசிரியரைப்பற்றி ஒரு சிறிது விளக்கி விட்டு மேலே செல்வோம்.

திருக்குறளாசிரியருக்கு திருவள்ளுவர் என்ற பெயர் இடைக் காலத்தில் ஏற்பட்டதே யன்றி அவ ருடைய உண்மைப் பெயரல்ல! அவருடைய பெயரை யும், அவர்தம் வரலாற்றையும் அறிந்து கொள்ள முடியாவிடினும் அவர்தம் பெயரின் இறுதியில் தேவர் என்ற பட்டப் பெயர் இருந்ததென்பதற்குப் போது

மான சான்றுகள் இருக்கின்றன. நாம் மேலே குறித்துள்ள நீலகேசி ஆசிரியர் திருக்குறளாசிரியரை **தேவன்** என்றழைத்திருப்பதாலும், மாமூலனூர் "அறம் பொருள் இன்பம் வீடென்னும் நானகின், திறம் அறிந்து செப்பிய **தேவை**" என்பதினுலும், சீவக சிந்தாமணியின் உரையாசிரியர் நச்சினார்க்கினியர் தமது உரையில் திருக்குறளை மேற்கோளாகக் குறிப்பிடும்போதெல்லாம் **தேவர் கூறுகின்றார்** எனக் குறிப்பிடுவதாலும், ஔவைப் பிராட்டியார் "**தேவர்** குறளும் திருநான் மறை முடிவும்" என அருளியிருத்தலானும், திருக்குறளாசிரியரின் பெயர் தேவரென்றே வழங்கிற்றேவெனவும் சந்தேகிக்க இடமளிக்கின்றது. புலவர்களுக்கெல்லாம் புலவராய் விளங்கும் திருக்குறளாசிரியரை அக்காலத்துப் புலவர்களும், பிற்காலத்துப் புலவர்களும் அவரிடம் கொண்டுள்ள மரியாதையின் காரணமாகவும், புலமையின் காரணமாகவும், அவர் தம் முழுப் பெயரையும் கொண்டு அழையாமல் **தேவர்** என்றே அழைத்தனர் போலும்! ஒரு சமூகத்தில் செல்வாக்கும், மதிப்பும் வாய்ந்த ஒருவரை அச்சமூகத்தார் அவர் தம் பெயரைக் கொண்டழையாமல் செட்டியார் என்றோ, முதலியாரென்றோ அழைப்பதைப் போன்று புலவர் சமூகத்தில் திருக்குறள் ஆசிரியரை **தேவர்** என்றழைக்கும் வழக்கம் நிலவியிருந்தது. எனவே நாம் முன்னர் கூறியபடி திருக்குறளாசிரியர் அறவாழி அந்தணனும் பகவான் **விருஷப தேவரின்** அறக் கடலிலிருந்தே திருக்குறளெனும் திருவறத்தைத் திரட்டி யளித்தார் என்பது உறுதியாகிறது.

இத்தகைய சிறப்பு வாய்ந்த பொருளாதார சமத்துவத்தை அறநெறிகளில் ஒன்ருக வகுத்தளித்த பகவான்

விருஷப தேவரைத் தமிழ்த் தென்றல் திரு. வி. க. அவர்கள் தாமியற்றிய "அருகன் அருகே" என்ற அறிவு சான்ற நூலிலும், "பொருளும் அருளும்" என்ற பொருள் செறிந்த நூலிலும் மிக அழகாக விளக்கியுள்ளார்கள். தமிழ்ப் பெரியார் திரு. வி. க. அவர்களின் அறத்தொண்டும் அரசியல் தொண்டும் இமயம் முதல் குமரிவரை நன்கு அறியும். இப்போது அப் பெரியாரின் இரு கண்களும் படலம் மறைக்கப் பட்டு ஒளியிழந்துள்ளன. எனினும் அவர் தம் இயற் கைப் பண்பும் இணையற்ற அறிவும், வாளாவிருக்க வில்லை. மேல் நாட்டு அறிஞர் மில்டன் போன்று இன்று திரு. வி. க. அவர்களின் அறிவும் சுடர் விட்டு ஒளி வீசுகின்றது. இவ்வொளியினின்றும் உதித்தவை தான் மேலே கூறிய இரு அரசியல் அறநூல்களுமாகும். அவ்விரு நூல்களிலும் மிகுபொருள் விரும்பாமை என் னும் பேரறத்தை விளக்குகையில் முறையே அவர்கள்,

"பொருளொரு பாலே பெருகி மறுபால்
அருகின் குழப்பம் ஆர்க்கும் என்பதை
என்றே! என்றே! என்றே உணர்ந்து
மிகுபொருள் வேட்டலை விடுக வென்றவன்"

எனத் திருக்குறள் ஆசிரியர் போன்றே பகவான் விருஷப தேவரைப் போற்றுகின்றார்கள். அதுமட்டுமல்ல,

"ஆதி அருகன் ஓதினன் மூலம்;
அகிம்சை மேலாம் அறமென முதல்முதல்
அருளிய பெருமை அருகனுக் குண்டே;
அகிம்சை உயிர்ப்பை அளித்த ஐயன்,
சீலப் போர்வையும் சால அமைத்தனன்
சீலம் வளர்வழி கோலினன்; அதுவே

மிகுபொருள் விரும்பா மேன்மை ஒழுக்கம்
மிகுபொருள் விரும்பாத் தகுதி யிடத்தில்
அகிம்சா தருமம் ஆடல் புரியும்;
மிகுபொருள் விரும்பும் விலங்குள இடத்தில்
அகிம்சை அகலும்; புகுங்கொலை களவு;
மிகுபொருள் விரும்பாத் தகுதி, அகிம்சை,
உண்மை சீலம் ஒழுக்கம் காக்கும்,
பொருளின் நிலைக்கும் அருளின் நிலைக்கும்
உற்றுள தொடர்பை உற்று நோக்குக;"

என்று, கடலிலே திசை தெரியாது கலங்கும் மாலு மிக்குத் திசையறிவிக்குங் கலங்கரை விளக்கம்போல, பண்டைய அரசியல் கொள்கையை இன்றைய மக்க ளுக்கு நன்கு விளக்குகின்றார்கள். எனவே தமிழ்ப் பெரியார் திரு. வி. க. அவர்களின் உள்ளமும் பாட் டாளி மக்களின் பக்கமே பேசுகின்றது. மகாத்மா காந்தி யடிகளும் அஹிம்ஸை, மிகுபொருள் விரும்பாமை என்னும் அறங்களையே மேற்கொண்டா ரென்பதற் கறிகுறியாக மிகுபொருள் விரும்பா மேனிலையை விளக்கும்போது * "நமது பொருள்களுக்கு நம்மை உரிய வர்களாக நினைத்துக் கொள்ளாமல் தருமகர்த்தாக்களாகவே கருத வேண்டும். அப்பொருள்களை சமூக நலனுக்காகப் பயன் படுத்தித் தாமும் பொதுச்சேவையில் ஈடுபட வெண்டும். பொதுச் சேவை செய்வதன்பொருட்டு நமக்குத் தேவையான

* "We must regard ourselves, not as owners, but as trustees of our wealth, and use it for the service of society taking for ourselves no more than a fair return for services rendered. Under this system there would be none poor, none rich."

—Mahathma Gandhiji.

சிறிது பொருளை அதில் எடுத்துக்கொள்ள வேண்டும். இவ்வாறு ஒவ்வொரு தனவந்தர்களும் செய்ய முன்வந்தால், நாட்டில் ஏழை என்றும், செல்வர் என்றும் பாகுபாடின்றி, மக்கள் அனைவரும் இன்புற்று வாழ்வார்கள்" என்று கூறியுள்ளார்கள்.

## ஆச்சார்ய விநோபாஜீயின் அருள் தொண்டு

சிறப்பு வாய்ந்த இத்தத்துவத்தைத் தான் இன்று நமது ஆச்சார்ய விநோபாஜீ நடைமுறையில் செயலாற்றி வருகின்றார். அண்மையில் காசியில் பேசிய பொதுக் கூட்டத்தில், "இன்று **காரல் மார்க்ஸின்** கருத்துக்கள் பரவிவிட்டன. அதைச் சிலர் விரும்பவில்லை. ஆயினும் அதைப்பற்றி எல்லோரும் யோசிக்கின்றனர். மார்க்ஸின் கருத்துக்கள் எப்படி பரவின? ஹிம்ஸையால் பரவியதா? இல்லை. செயலாளர் பலர் அதை மக்களுக்கு உரைத்துப் பிரசாரம் செய்தனர். இக்கருத்துக்களின்படி வாழ்க்கை நடத்தினர்கள். மார்க்ஸ் ஒரு மகரிஷி. அவர் சக்திவாய்ந்த கருத்துக்களை மக்களுக்கு எடுத்துச் சொன்னர். இப்போது அவை தம் சக்தியாலேயே பரவிவிட்டன" எனக் கர்ஜித்துள்ளார். இதனுல் விநோபாஜீக்குப் பொதுவுடைமைக் கொள்கையில் நம்பிக்கையும், அஃது நமது நாட்டிற்கு அத்தியாவசியம் என்ற ஆர்வமும் ஏற்பட்டுள்ளதென்பது விளங்குகிறது. அது மட்டுமல்ல! அதனை அஹிம்ஸா முறையில் செயலாற்றவும் துணிந்துவிட்டார்.

ஆச்சார்ய விநோபாஜீ அஹிம்ஸா தருமத்தையும் மிகுபொருள் விரும்பாமை எனும் பொதுவுடைமைத்

தத்துவத்தையும் மக்கள் வாழ்க்கையில் புகுத்தி, ஒரு புத்துணர்ச்சியை வளர்த்து வரும் பொதுவுடைமைச் சேவையை என்றும் மறக்க வியலாது. அளவுக்கு மிஞ்சிய நிலங்களைப் பெற்றிருக்கும் நிலச்சுவான்தார்களிடம் சென்று, ஏழை மக்களின் துன்ப நிலையைத் தமது **கண்ணீரால்** விளக்கி, அவர்கள் வாழ்வை நிலை நிறுத்த நிலதானங் கேட்கின்றார். விநோபாஜீயின் அறவுரைகள் நிலச்சுவான்தார்களின் உள்ளத்தே ஊடுருவிச் சென்று உருக்குகின்றன. நிலச்சுவான்தார்களும் ஏழைகள்பால் இரக்கங்கொண்டு தங்களாலான நிலங்களை மகிழ்ச்சியோடு தானம் செய்கின்றார்கள். இதுவரை ஆயிரக்கணக்கான ஏக்கர் நிலங்கள் கிடைத்துள்ளன. நமது ஜனாதிபதி டாக்டர் ராஜேந்திர பிரசாத், பீகாரிலுள்ள தமது எஸ்டேட்டிலிருந்து தேவையான நிலத்தைத் தெரிந்தெடுத்துக் கொள்ளும்படி ஸ்ரீ விநோபாஜீயிடம் தெரிவித்து விட்டார். இது போன்று தமிழ் நாட்டிலும் பல நிலச்சுவாந்தார்கள் ஏராளமான நிலங்களைத் தானம் செய்து வருகின்றார்கள். எனவே நிலப்பங்கீடு செய்வதில் மக்களுக்கு எவ்வளவு ஆர்வம் ஏற்பட்டுள்ளது என்பது இதனால் விளங்குகிறதன்றோ?

> **"தம்மில் இருந்து தமது பாத்துண்டற்றால்**
> **அம்மா அரிவை முயக்கு"**

எனக் குறளாசிரியர் கூறியதுபோலன்றோ மக்கள் மகிழ்ச்சியோடு நிலதானம் செய்து வருகின்றார்கள். ஸ்ரீ விநோபாஜீ டெல்லியில் பேசுகையில் "இந்தப் பிரயாணத்தில் எனக்குத் தினம் ஒன்றுக்கு 300 ஏக்கர்கள் வீதம் வழங்கப்பட்டன. இந்தச் சாதனையைக்

கண்டு ஆச்சரியப்படத் தேவையில்லை. ஏனெனில், இந்தத் திட்டம் நாட்டில் அமைதி நிலவ உதவும் என்பதை மக்கள் தெரிந்துகொண்டு விட்டனர். காந்திஜீயின் போதனைகளாலும், நம் புராதன கலாசார பண்பாடுகளாலும் சமாதான பாதையில் செல்லும் இந்தியாவுக்கு எப்பொழுதும் கௌரவம் ஏற்பட்டுள்ளது" என்று இறுதியாகக் கூறினர். ஏழைகளின் நண்பரான அவர் அந்நிலங்களை பாட்டாளி மக்களுக்கே பங்கீடு செய்து சொந்தமாக்குகின்றார். இனி உலகில் வாழ வழியில்லையே என ஏங்கி நின்ற பல குடும்பங்கள் எதிர்பாராத இவ்வின்ப நிலையை எய்தி, வாழ்க்கையை நடத்தி வருகின்றன. பகுத்துண்டு பல்லுயிரோம்பும் பண்பும் இன்று மக்களிடையே வளர்ந்து வருகிறது. நாட்டில் அமைதியும் சமாதானமும் உண்டாகவேண்டுமானால், ஆச்சார்ய விநோபாபாவேயின் வேண்டுகோளை மக்கள் மேற்கொள்ள வேண்டும். இல்லையேல் நாட்டில் வறுமையும் பசியும் வளர்ந்து பெரும் புரட்சியில் கொண்டு செல்லும். இவ்வுண்மையைப் பொதுவுடைமைப் பெரியார் **திரு. வி. க.** அவர்கள் கருத்து போன்றே ஆச்சார்ய விநோபாபாவே 12—10—51-ல் ஹான்ஸி என்ற ஊரில் பேசிய சொற்பொழிவில் விளக்குகின்றார். வருமாறு :—

"பெரிய மிராசுதார்களுடைய மனோபாவத்தில் மாறுதல் ஏற்படும்படிச் செய்து நிலத்தில் உழுது பாடுபடுகிறவர்களிடம் அனுதாப உணர்ச்சி ஏற்படும்படி செய்வதே என்னுடைய நோக்கமாகும். நிலத்தின் சொந்தக்காரர் கடவுளே யன்றித், தாங்கள் அல்ல என்பதை மிராசுதார்கள் உணரவேண்டும். மற்ற இயற்கைச்

*சாதனங்களை பகிர்ந்து அனுபவிக்க எல்லா மக்களுக்கும் சம உரிமை இருப்பதைப்போலவே, நிலத்தையும் பகிர்ந்து அனுபவிக்க அவர்களுக்கு உரிமை உண்டு என்பதை மிராசுதாரர்கள் அறியவேண்டும்.*

"தேவைக்கு அதிகமான நிலத்தை வைத்துக்கொண்டிருப்பதே பெரும் பாவகாரியம் என்ற மனோநிலை நிலச்சுவான்தார்களுக்கு ஏற்படவேண்டும் என்றே நான் விரும்புகிறேன். *இதில் நான் வெற்றிபெற்று விடுவேனாயின், ரத்தம் சிந்தாமலேயே சமூக அமைப்பில் பெரிய மாறுதல் ஏற்பட்டதாகும். இஃது இல்லையானால் இரத்தஞ் சிந்தி புரட்சி உண்டாகும். இதனால் துன்பங்கள், படுகொலைகள், பட்டினி போட்ட கஷ்டங்கள், ராணுவங்களுக்கேயன்றி நிரபராதியான மக்களுக்கும் அதிகமாக உண்டாகும்."*

—'தினசரி' *11-10-51*

## கி. மு. 6-வது நூற்றாண்டில் *பொதுவுடைமை!*

நமது நாட்டில் பகவான் விருஷபதேவரால் அருளப்பட்ட ஐம்பெரும் அறங்களில் ஒன்றாகிய மிகுபொருள் வெஃகாமை என்ற பொதுவுடைமைத் தத்துவத்தைக் கடைப்பிடித்து மக்கள் வாழ்ந்ததாகச் சரித்திரச் சான்றுகளும் இருக்கின்றன. 9-6-47 "பாரததேவி"யில் அன்பர் எஸ். என். என்ற அறிஞரால் எழுதப்பட்ட "ஆதிகால இந்தியாவில் பொதுவுடைமை" என்ற கட்டுரையில், "கிறிஸ்து பிறப்பதற்குமுன் 6-வது நூற்றாண்டில் அதாவது ஜைனமதம் தலையெடுத்தபொழுது, நம் நாட்டில் பொதுவுடைமை அமுலில் இருந்திருக்கிறது. எல்லா நிலங்களும் பொதுவாக உழப்படும். பலன் எல்லாருக்கும் பங்கிடப்படும்.

பொது நிலங்களைத் தனிப்பட்டவர்கள் யாரும் சொந்தமாகக் கொள்ளமுடியாது. கிராமங்களில் செல்வம் சரியாகப் பங்கிடப் பட்டிருந்தது. அப்பொழுது பிச்சைக்காரர்கள் கிடையாது. நிலச்சுவான்தாரும் கிடையாது'' என விளக்கியுள்ளார்.

இவ்வரலாற்றுச் செய்திக்கு அரணாக பகவான் விருஷபதேவர் அருளிய அறத்தின் வழிவந்த இலக்கியங் களான சீவக சிந்தாமணி காவியத்திலும் மேருமந்தர புராணத்திலும் விளங்குகின்ற இருபெரும் பொது வுடைமைக் கவிகளை இங்கே கண்டு மகிழ்வோம்.

''ஒன்றுடைப் பதினையாண்டைக்
குறுகடன் இறைவன் விட்டான்
இன்றுளீர் உலகத்தென்றும்
உடனு ளீராகி வாழ்மின்
பொன்றுக பசியும் நோயும்
பொருந்தலில் பகையும் என்ன
மன்றல மறுகுதோறும்
மணி முரசார்த்த தன்றே''

—சீவக சிந்தாமணி.

''பாரிலுள்ளவர்க் கெலாம் படுபயன் பொதுவுமாய்
ஏர்மலிந் திடங்களெங்கும் இன்பமே பயந்துநல்
வேரிசாந்த மூடுபோகி மேவியாடல் பாடலோடும்
வாரமாதர்போன்ற மாடவூர்க டோறும் மாடெலாம்''

மாடெலாம் = செல்வமெல்லாம்.

—மேருமந்தர புராணம்.

உலகமே வியப்புறும் இவ்வின்பக் காட்சியாம் பொருளாதார சமத்துவத்தை, அறிவியல் கொள்கை யை, முதல் முதல் உலகுக்குப் போதித்த பகவான் விருஷப தேவர் யார் என்பதை ஆராய்வோம்.

## "பகவான் விருஷபதேவர் யார் ?"

"அகரமுதல வெழுத்தெல்லாம் ஆதி
பகவன் முதற்றே உலகு"

என்ற திருக்குறள் கடவுள் வாழ்த்தின் முதற் குறளையும் அதனைத் தொடர்ந்துவரும் மற்ற ஒன்பது குறள்களையும் கடவுள் வாழ்த்தாகக் கொண்டாடுகின்றோம். ஆனால், திருக்குறள் ஆசிரியர் கருத்திற் கேற்ப, கடவுட் கொள்கையை அறிந்துள்ளோமா என்றால், அதுதான் இல்லை. நமது தமிழகத்தின் துரதிர்ஷ்டம் தருமர் போன்ற பேரறிஞர்களின் உரைகள் கிடைக்காமையால், பிற்காலத்தெழுந்த மதவாதிகளின் உரைகளே இன்று காணப்படுகின்றன. அதனால் அந்தந்த உரையாசிரியர்களின் மதக்கொள்கைகளுக்கேற்பக் கடவுட் கொள்கையும் வலிந்து உரைகாணப்பட்டுள்ளது. அதுமட்டுமல்ல! பெரும்பாலும் அம்மதக் கொள்கைகளுக்கு முரணாக இருப்பதால், சிலர் இப்பத்துக் குறட்பாக்களும் இடைச்செருகல் என்று கூடக் கூசாமல் எழுதியும் பேசியும் விடுகின்றார்கள். எனவே, திருக்குறள் ஆசிரியரைப் பற்றியும் அவராற் போற்றப்படும் **ஆதிபகவனைப்** பற்றியும், பெரும்பாலோரால் நன்கு அறிந்துகொள்ள முடியாமற் போய்விட்டது. எனினும் திருக்குறள் சார்பான தமிழ் இலக்கியங்களும், நீதி நூல்களும், தோத்திரப்பாக்களும் ஆதிபகவனைப் பற்றியும் அவரது அறநெறிகளைப் பற்றியும், வெள்ளிடைமலைபோல விளக்கிக் கொண்டிருக்கின்றமையால், அக்கொள்கை என்றும் நிலைத்து நிற்குமென்பது உறுதி.

"மன்னிய பேருலகனைத்தும்
நின்னுள்ளே நீ யொடுக்கினை
நின்னின்று நீ விரித்தனை
நின்னருளின் நீ காத்தனை
எனவாங்கு,
**ஆதிபகவனை** யருகனை
மாதுயர் நீங்க வழுத்துவம் பலவே"

எனத் திருக்கலம்பகமும்,

"**ஆதிபகவன்** அசோகவசலன்
சேதிமுதல்வன் சினவரன் தியம்பகன்"

எனத் திருப்பாமாலையும்,

"அத்தனே யென்னை ஆளீர் சரணம்
**ஆதிபகவா** னருளே சரணம்"

எனத் தோத்திரத்திரட்டும்,

கோதி லருகன் றிகம்பர னெண்குணன் முக்குடையோன்
**ஆதிபகவ** னசோகமர்ந்தோ னற வாழியண்ணல்
சோதி முனைவன் சினேந்திரன் பொன்னெயில்
நாதன் சுத்தன்
போதி னடந்தோ னதிசயன் சாந்தனற் புங்கவனே"

எனக் கயாதர நிகண்டும், **ஆதிபகவன்** என்ற சொற்றொடரையே கொண்டு கடவுள் நிலையை விளக்குகின்றது.

*இதுபோன்று மற்ற ஒன்பது குறள்களில் கூறும் **ஆதிபகவனின்** இயற்பண்புகள் அனைத்தும் மேலே கூறிய அறநூல்களிலும், தொல்காப்பியம், சீவகசிந்தாமணி, சிலப்பதிகாரம் போன்ற பல நூல்களிலும், வடமொழி இலக்கியங்கள் பலவற்றுள்ளுங் காணலாம். எனவே,

---

* திருக்குறள் தெய்வக் கொள்கை என்ற நூலில் பார்க்கவும்

இப்பேரிலக்கியங்களினின்றும் **ஆதிபகவன்** என்றுபோற்றப்படுபவர், நாம் முன்னர்க்கூறிய சமுதாய அமைப்பாளரும், **இல்லறம்**, **துறவறம்** ஆகிய இருபேரறங்களை வகுத்தவருமாகிய பகவான் **விருஷபதேவரே** என்பது தெளிவாகிறது.

**விருஷபதேவர்** தாம் வகுத்த அறம், பொருள், இன்பம், வீடு ஆகிய அறநெறிகளை முறையே வாழ்க்கையில் நடத்திக் காண்பித்தார். இல்லற வாழ்க்கையில் ஈடுபட்டு மனைவி மக்களுடன் பல ஆண்டுகள் வாழ்ந்து மகிழ்ந்திருந்தார். பின்னர், ஆத்மார்த்திகத் துறையை விரும்பி, தமது மூத்த குமாரர் பரதனுக்குப் பட்டஞ் சூட்டிவிட்டுத் தாம்துறவறத்தை மேற்கொண்டார். பல மலைகளிலும், காடுகளிலும் அலைந்து தவமியற்றலானார்.

எனவே உலகியல் முன்னேற்றமும் ஆத்மீக முன்னேற்றமும் அவசியம் என்பதை உலகுக்கு அறிவிக்கவே தாம் இல்லறத்தினின்றும் துறவை மேற்கொண்டார் என்பது போதரும். இவ்வுண்மையை,

* "மன்னுயிர் காத்தலான் மனம்விட்ட வருளினொடு
இன்னுயி ருய்கென்ன **வில்லறமு** மியற்றினையே
புன்மைசா லற நீக்கிப் புலவர்கள் தொழுதேத்தத்
தொன்மைசால் குணத்தினற் **றுற வரசாய்த்**
தோற்றினையே"

—யாப் விருத் சூத்ரம் 84 உரை.

---

* இல்லறத்தார், துறவறத்தார் என வழங்கும் தமிழ்ச் சொற்களே வடமொழியில் முறையே ஸ்ராவகர் (சாவகர்) ஸரமணர் (சமணர்) என வழங்குகின்றன. இதனால் ஆதிபகவனின் அறநெறி, சமயத்தின் பெயராலமையவில்லை யென்பது தெளிவு.

என்ற தோத்திரத்தாலும், இல்லறம் துறவறம் ஆகிய வற்றின் சிறப்பினை,

"காமம் சான்ற கடைகோட்காலை
ஏமம் சான்ற மக்களொடு துவன்றி
அறம் புரிசுற்றமொடு கிழவனும் கிழத்தியும்
சிறந்தது பயிற்றல் இறந்ததன் பயனே"

—தொல்காப்பியம்.

"மக்களொடு புணர்ந்து மனையறம் காத்து
மிக்ககாம வேட்கை தீர்ந்துழி
தலைவனுந் தலைவியும் தம்பதி நீங்கித்
தொலைவில் சுற்றமொடு துறவறம் காப்ப"

—அகப்பொருள் விளக்கம்.

என்ற பண்டைய நூல்களாலும் அறியலாம். உலக இயற்கையோடியைந்த இவ்வற நெறிகளின் உண்மைகளை அறியாதாரே ஜைனதருமம் மக்களைக் காட்டிற்கு அனுப்பிவிடுகிறது என்று சுலபமாகக் கூறிவிடுகிறார்கள். பகவான் விருஷபதேவரின் **துறவறம்** மிகமிகச் சிறந்தது. அவர் முற்றுந் துறந்த முனிவரானார். விருஷபதேவர் மேற்கொண்ட துறவறத்தின் இயல்பினையே நமது குறளாசிரியர்,

"அடல்வேண்டும் ஐந்தன்புலத்தை விடல்வேண்டும்
வேண்டிய வெல்லாம் ஒருங்கு"

"இயல்பாகும் நோன்பிற் கொன்றின்மை உடைமை
மயலாகும் மற்றும் பெயர்த்து"

"மற்றுந்தொடர் பாடெவன்கொல் பிறப்பறுக்க
லுற்றார்க்கு உடம்பும்மிகை"

என விளக்கியுள்ளார். இத்தகைய சிறந்த பற்றற்ற நிர்வாண நிலையையுடைய **விருஷப தேவரின்** உருவச்

சிலையை நாடெங்கும் வைத்து வணங்கினர். தமிழகத்தில் ஆதிநாதர், ஆதீஸ்வரர், ஆதிபட்டாரகர், கைலாசநாதர், திரிலோகநாதர், ஆதிஜினன், விருஷப ஸ்வாமி என்ற பெயர்களால் அழைக்கப்படும் கோயில்களை எங்கும் காணலாம். விருஷபர் மலை என மதுரைக்கருகில் ஒரு மலை இன்றும் காட்சியளிக்கின்றது. இந்நிர்வாண நிலையையே வைதிக வேதங்களில் சிசினதேவதையை வழிபடுகின்றவர்கள் என்று பேசப்படுகின்றனர்.

எனவே **விருஷபதேவர்** ஆத்மீக மேம்பாட்டிற்காகத் துறவறமேற்கொண்டு இறுதியாகக் **கைலாச மலையில்** நின்று கடுந்தவம் புரிந்தார். அங்கு அவருக்குக் கேவல ஞானம் உதயமாயிற்று. வினைகளை வென்று வீடுபேறு பெற்றார். வினையின் நீங்கி விளங்கிய அறிவனைப் பரிநிர்வாணம் (வீடுபேறு) அடைந்தமையால் அவரைப் பகவன், சித்தன், சிவன், சிவகதிநாயகன், எண்குணன், அருகன், அறவாழி வேந்தன் எனப் பல பெயர்களால் சான்றோர் போற்றி வணங்கினர். அவர் பரி நிர்வாணமடைந்த திருநாளைத்தான் இன்றும் **சிவராத்திரி**யெனக் கொண்டாடிவருகிறோம். மக்கள் பண்பிற்கும் வாழ்விற்கும் வழிவகுத்தருளிய **விருஷபதேவரின் திருவறம்** உலகெங்கும் பரவிவரலாயின. இவ்வாறு பல நூற்றாண்டுகள் சென்ற பின்னர், வெவ்வேறு காலங்களில் விருஷபதேவரைப் போன்றே, இருபத்து மூவர் தோன்றினர். அவர்களும் விருஷபதேவர் அருளிய **திருவறங்களை** மக்களுக்கு போதித்துத் தாங்களும் அவ்வறநெறியில் நின்று தவமியற்றி வீடுபேறு பெற்றனர். அவர்கள் அனைவரையும் பகவன், சித்தன், சிவகதிநாயகன், என்றே போற்றலாயினர். ஆகவே இவ்விருபத்து மூவருக்கும் முதல்வ

ராக **விருஷபதேவர்** விளங்கினமையாலும், அவர் அருளிய அறநெறிகளையே முதல் நூலாகக் கொண்டமையாலும் அவரை **ஆதிபகவன்** எனச் சிறப்புப்பெயரால் அழைத்து இருபத்து நான்கு தீர்த்தங்கரர்களாகப் போற்றினர். **தீர்த்தங்கரர் என்றால்** அறவுரை பகர்வோர் என்பது பொருள்.

## ஆதிபகவன் வரலாற்றுண்மை

மேலே கூறிய விருஷபதேவர் வரலாற்றை மெய்ப்பிக்கவே திருக்குறளாசிரியர் தேவர், கடவுள் வாழ்த்தின் முதற் குறளில் "**ஆதிபகவன்**" என்ற விருஷபதேவரின் சிறப்புப் பெயரை அமைத்து மற்ற ஒன்பது குறள்களிலும் அவர்தம் இயற்பண்புகளைப் போற்றியுள்ளார். அக்காலத்தில் **ஆதிபகவன்** என்ற பெயரே வழக்காற்றில் அமைந்திருந்தமையால் அப்பெயரையே தமது குறளில் வழங்கியுள்ளார். மேலும் **ஆதிபகவானால்** அருளப்பட்ட அறங்களையே முப்பாலாகக் கூறியுள்ளார். இவ்விருபத்து நான்கு தீர்த்தங்கரர்களில் 23-வது தீர்த்தங்கரர் பாரீஸ்வநாதரும், 24-வது தீர்த்தங்கரர் மகாவீரவர்த்தமானரும் வரலாற்றுப் புருடர்களாக விளங்குகின்றனர்என்பதுதெளிவு. தற்கால ஆராய்ச்சிப்படி விருஷபதேவரும் (ஆதிபகவன்) வரலாற்றுப் புருடராகவே பல அறிஞர்களால் நிலை நிறுத்தப்படுகிறார். விருஷபதேவர் வரலாற்றை அவரால் அருளிய அறநெறிகளை மேற்கொண்ட ஆதிபுராணம், பத்மபுராணம் போன்ற ஜைன இலக்கியங்கள் தவிர வைதிக சம்பந்தமான வேதங்களும், புராணங்களும் போற்றிப் புகழ்கின்றன. அவைகளை விளக்குவதாயின் இடம் போதா

தாகையால், அந்நூல்களின் விவரங்களை மட்டும் ஈண்டுக் குறித்துள்ளேன். ரிக் வேதம் (10-12-166-வது சூத்திரங்கள்) *பாகவதம் (5-வது ஸ்கந்தம்) மார்க்கண்டேய புராணம் (அதி 50 பக்கம் 150) கூர்ம புராணம் (அதி 41 பக்கம் 61) பிரம்மாண்ட புராணம் (பாகம் 1 அதி 14 பக்கம் 24) வாயு புராணம் [பாகம் 1 அதி 33 பக்கம் 51] ஸ்காந்தம் [அதி 37 பக்கம் 148] சிவ புராணம் [அதி 4 பக்கம் 24] லிங்க புராணம் [அதி 47 பக்கம் 68] விஷ்ணு புராணம் [பாகம் 2 அதி 1 பக்கம் 77] இவ்வாறே பல நூல்களிலும் விருஷபதேவர் போற்றப்படுகின்றபடியால் அவர் தம் அறம் உலகுக்கே உரியதாக விளங்கிற்றென்பதோடு அவர் ஒரு சிறந்த வரலாற்றுப் புருடர் என்பதும் தெளிவாகிறது. மேலும், **மொஹன்சதாரோ, ஹரப்பாவில்** கிடைத்த முத்திரைகளிலும் **விருஷபதேவர்** உருவமும் **விருஷபாய நம: ஜினேசாய நம:** என்ற எழுத்துக்களும் பொறிக்கப்பட்டுள்ளன. அது மட்டுமல்ல, **சுவாமி கர்மானந்தா** என்ற பேராசிரியர் தமது **ஆழ்ந்த** ஆராய்ச்சியின் முடிவாகத் தாம் எழுதிய “**தர்மகா ஆதி பிரவர்த்தகா**” என்ற நூலில் “இப்பூவுலகத்தின்கண் முதன் முதலாக **அறம்** வகுத்தவர் **விருஷபதேவரே** என்பது உறுதி” என்றும் எழுதி

---

* “The Bhagawata Purana endorses the view that Rsabha was the founder of Jainism There is evidence to show that so far back as the first century B.C. there were people who were worshipping Rsabhadeva, the first Tirthankara. There is no doubt that Jainism prevailed even before Vardhamana or Parswanatha. The Yajurveda mentions the name of three Tirthankaras—Rsabha, Ajitanatha and Aristanemi”

Indian Philosophy, P. 287—especially the Yajurveda.

யுள்ளார். மேலும் விருஷபதேவரின் மூத்த குமாரர் பரதன் பெயராலேயே, இந்நாட்டிற்குப் **பரத கண்டம்** என வழங்குவதினின்றும் அவர் வரலாற்றுப் புருஷரே என்பது மறுக்க முடியாத சான்றாகும். இவ்வுண்மை களை ஆராய்ந்தே உயர் திருவாளர்கள் ராவ்பகதூர் **அ. சக்கரவர்த்தி நயினார் எம். ஏ. ஐ. இ. எஸ்.** அவர்கள், பேராசிரியர் **டாக்டர் ராதாகிருஷ்ணன் அவர்கள்,** பேரா சிரியர் **ஆர். டி. ரானடே அவர்கள், டாக்டர் எஸ். சி. வித்தியா பூஷண் அவர்கள், டாக்டர் என். என். பாஸு அவர்கள்** ஆகிய பல வரலாற்றுப் பேராசிரியர்கள் விருஷபதேவரை வர லாற்றுப் புருடர் என்றே நிரூபித்துள்ளார்கள்.

**ஆதிபகவன் (விருஷபதேவர்) அமைத்த சமுதாயம் வர்க்க பேதமற்றது. அறமோ உலகுக்கே உரியது. தேவ மூடம், உலக மூடம், பாசண்டி மூடம்** ஆகிய மும்மூடங்களை அகற்றி, **நற்காட்சி, நன்ஞானம், நல்லொழுக்கம்** ஆகிய நல்லறிவையும் ஒழுக்கத்தையும் வளர்ப்பது. **அன்ன தானம், அபயதானம், ஔஷததானம், வித்தியாதானம்,** ஆகிய நான்கு தானங்களால் மக்கள் வாழ்க்கை நலத் தைப் பாதுகாப்பது. பற்பல கலைகளை வளர்க்க ஆங் காங்குப் பள்ளிகளையும், மடங்களையும் சங்கங்களையும் அமைப்பது. இவ்வுண்மைகளைச் சங்க இலக்கியங்களி லும் கல்வெட்டுகளிலும் காவியங்களிலும் காணலாம். எனவே, அறிவியக்கக் கொள்கையாகிய விருஷபதேவர் அறத்தினைக் கீழை நாடு மட்டுமல்ல மேல் நாடுகளி லும் பலபேரறிஞர்கள் பாராட்டியும் மேற்கொண்டும் உள்ளார்கள். சமீபகாலத்தில் இங்கிலாந்திலே வசித்த வரும் உலகெலாம் அறிஞர் எனப் போற்றப்பட்டவரு மாகிய **ஜார்ஜ் பெர்னாட்ஷா** சில ஆண்டுகளுக்கு முன் இந் தியாவிற்கு விஜயம் செய்திருந்தார். அது சமயம் தாம்

இந்தியாவில் அறிந்து கொண்ட ஓர் உண்மையை விளக்குகையில் **"எனது சமயம் சமணமாயிருப்பதை அறிந்து கொண்டேன்"** எனக் கூறியுள்ளார். எனவே அவர் தம் ஒழுக்க நெறியும் பகுத்தறிவின் பண்பும் இங்குள்ள சமண அறத்தோடு ஒத்திருப்பது புலனாகிறதல்லவா? நடுநிலைமையாளர் எவரும் சமண அறத்தினைப் போற்றாமலிருக்க முடியாது. 24-4-48-ல் டில்லிமாநகரில் நடந்த மகாவீரஜெயந்தியில் தலைமை தாங்கிய ஆச்சார்ய வினோபாஜீயின் தலைமையுரையும் நமது கொள்கைக்கு அரண் செய்வதால் அவ் அறிவுரையையும் இங்கே அளிக்கின்றேன்.

* "மகாவீரர் ஏறத்தாழ 2.500 ஆண்டுகளுக்கு முன்பு இந்தியாவில் தோன்றியவர். அவர் மக்கட்கு அருளிய நல்லுரைகள் இந்தியாவுக்குப் புதியனவல்ல. சமண ஆசிரியர்களான இருபத்து நான்கு தீர்த்தங்கரருள், மகாவீரர் கடைசி தீர்த்தங்கரராகக் கருதப்பட்டார். இதனால், சமண சமய சித்தாத்தங்கள் மகாவீரர் தோன்றுவதற்குப் பல நூற்றாண்டுகட்கு முன்பே இங்கு நிலைபெற்று விட்டன என்பது அறியக்கிடக்கின்றது.

இரிக்வேதத்தில், 'ஓ அருகனே! நீ இவ்வுலகத்தின் மாட்டு மிக்க தயையுடையவன்' என்ற வாழ்த்துரை ஒன்று வந்திருக்கிறது. இது ஒரு மந்திர மொழி. இதில் சமண சமயத்தின் அருஞ்சொற்களான **'அருகன்' 'தயை'** என்ற இரு சொற்களும் பயின்றிருக்கின்றன. இதைக் காணும்போது, சமண சமயம் வேதகாலத்தைவிட பழைமையுடையது என்றும் கொள்ளக் கிடக்கின்றது.

---

* இஃது 1948 ஜூலை மாதம் ஜெயினா கெஜட்டிலிருந்து மொழிபெயர்க்கப்பட்டதின் சுருக்கம்.

ஒரு மதம் சிறப்புடையது என்பதற்கு அது காலத்தால் மிகப் பழைமையுடையதாக இருக்கவேண்டுமென்பது அவ்வளவு முக்கியமான ஒரு காரணமல்ல. இஃது உண்மை தான். ஒரு மதம் மிகவும் பழைமையுடையது, ஆனால் உலகத்தின் உண்மை நெறிகள் அதில் நன்கு விளக்கப்படவில்லை. இன்னொரு மதம் பழைமையுடையதல்ல. புதியதுதான், எனினும் அதில் உண்மை நெறி நன்கு விளக்கப்பட்டிருக்கிறது என்றால், இந்த மதந்தான் சாலச் சிறந்ததே தவிர, முன்னைய மதம் அவ்வளவு சிறப்புடையதல்ல. மனிதனுக்கு மிக இன்றியமையாதது எப்பொருளையும் நன்கு ஆராய்ந்து அறிதல். இவ்வறிவுரையை வளர்ப்பதில், சமணம் பெரிதும் பணியாற்றி யிருக்கிறது.

'**எல்லா வுயிர்களிடத்திலும் அன்பா யிருத்தல்தான்** சமணத்தில் நன்கறியப்பட்ட முதல் சித்தாந்தம். சமண சமயம் கற்பித்த இரண்டாவது அறிவுரை எந்த ஒரு பொருளையும் நன்கு ஆராய்வதும், ஆராயுமிடத்து நடுவு நிலைமையை மேற்கொள்ள வேண்டுமென்பதுமாகிய இவ்வறிவுரை, 'அன்பாயிரு' என்பதைப்போல, எல்லாரும் அறிந்த ஒன்றாக இல்லாவிட்டாலும் அதைப் போல அவ்வளவு முக்கியத்துவமும் உள்ளதுதான். பிடிவாத மனப்பான்மையுடன் ஒரு பொருளை ஆராய்வது கூடாது. ஏன்? பிடிவாதம் ஒரு பொருளின் ஒரு பக்கத்து உண்மையைத் தான் காட்டவல்லது. ஆனால், சமணம் கற்பிப்பது என்னவென்றால், ஒரு பொருளின் எல்லா அமிசத்தையும் நன்கு ஆராயவேண்டும் என்பது. இதனைச் சம்யக்த் தரிசனம் (நற்காட்சி) என்ற சொல்லால் குறிப்பிட்டனர். அஃதாவது முழுவதும் சிந்தித்தல், என்பது. இது சமணத்தின் சிறப்பான ஒரு

படிப்பினை. இவ்விதமான பிடிவாதமற்ற பொதுநோக்கினால்தான், சமணத்தைத் தழுவுவோர் தொகை குறைந்து நின்றது என்றும் கருதப்பட்டது. என் கருத்துப்படிச் சமணம் வெகுவாகப் பரவியிருக்குமானால், அது தனது மேன்மையை யிழந்திருக்கும். அதனைப் பின்பற்றுவோர் குறைவாகவுள்ளனர் என்பதிலேயே அதன் பெருமையும் அடங்கி யிருக்கிறது.

சமணம் எந்த மதத்துடனும் விரோதம் பாராட்டுவதில்லை. அந்தந்த மதங்களின் குறைபாடுகளைச் சீர்திருத்தி அமைக்க வேண்டும் என்றே அது கருதியது. எல்லா வுயிர்களிடத்திலும் அன்பாயிருத்தலையும், எல்லாப் பொருளையும் நடுநிலையுடன் ஆராய்தலையும், முப்பது கோடி இந்துக்களும் மேற்கொண்டொழுகுவாரானால், அது சமணத்துக்கு வந்தவெற்றியேதான். ‘**ஜைன**’ என்ற சொல்லே ‘**வெற்றி**’ என்று பொருள் படும். தன்னை வென்றவன் எவனோ, அவனே உண்மை வீரன். உலகத்தை வென்றவன் வீரன். ஆனால், மகா வீரர் தம்மையே வென்றதோடு நில்லாது, இவ்வுலக அண்டத்தில் தாமும் இரண்டறக் கலந்துவிட்டார்; பாலில் சருக்கரை கலந்தது போல.

இந்தியாவின் இடைக்காலச் சரித்திரத்தைக் காணும்போது ஒரு காலத்தில் நமது கல்லூரிகளில் ஆசிரியர் சமணராகவும், மாணவர் இந்துக்களாகவும் இருந்தனர் என்று தெரிகின்றது. மராட்டிய தேசத்தில் முதன்முதல் குழந்தைக்குப் பாடங் கற்பிக்கும்போது, கணேசருக்கும், சித்தருக்கும் முதலில் வழிபாடு செய்யச் சொல்லிப் பிறகுதான் மற்றைய பாடங்களைத் தொடங்குகிறார்கள். இந்துக்கள் எல்லாரும் கொண்டா

டும் தெய்வமாக விருப்பதால், கணேசருக்கு முதலில் வழிபாடு செய்யும்படிச் சமண ஆசிரியர் கற்பித்தனர். விருஷபதேவருக்கு மறுபெயர் சித்தன் என்பது. எனவே சித்தனை வணங்கும்படி அடுத்தபடியாகக் கற்பித்தனர். சமுதாயத்தில் சமணர் எவ்விதமான செல்வாக்குப் பெற்றிருந்தனர் என்பதை இந்த வுண்மைகள் நன்கு எடுத்துக்காட்டும். சமணர்கட்கு அமைந்த அடக்கம் என்ற பண்பு கணேசருக்கு முன்பு சித்தன் வழிபாட்டை நடத்த வற்புறுத்த வில்லை.

சமணர் தங்களுக்கென்ற சில தனியுரிமைகளை எப்பொழுதும் வேண்டுவதில்லை. அவர்கள் தங்களைச் சீர்திருத்தக்காரர்களாகவே கருதினார்கள். அவர்கள் செய்த பணியும் அதுவேதான். அவர்கள் உண்மையிலேயே இந்து மதத்தில் பெரிய சீர்திருத்தத்தைச் செய்திருக்கிறார்கள். அவர்கள் கருத்து, அந்நெறியிலேயே எதிர்காலத்திலும் செல்லவேண்டுமென்பது. அஃதாவது மக்கட்குக் குருமாராக விளங்க அவர்கள் முனையவில்லை. மற்று, ஊழியராகவிருந்து, மக்கட்குக் கற்பிக்கவும், அவர்களைச் சீர்திருத்தவுமே விரும்பினர். இந்நெறியால் அவர்கள் தம் சித்தாந்தங்களை மிக வெற்றிகரமாகப் பரப்ப முடியும் என்பதே இதற்குக் காரணம்.''

இவ்வளவு சிறப்புற்றோங்கிய அறிவியக்கமும் அறநெறியும் 7 அல்லது 8-ம் நூற்றாண்டிற்குப் பின்னர் சிதறுண்ட செய்தி வரலாறு கண்ட உண்மை. அதனால் உலகிற்கு ஏற்பட்ட நஷ்டத்தையும் குழப்பத்தையும் உணர்ந்தே மகாத்மா காந்தியடிகள் விருஷபதேவர் கண்ட அஹிம்ஸா தருமத்தையும் சமுதாய ஒற்றுமை

யையும் மேற்கொண்டாரென முன்னரே கூறியுள்ளோம். அதனை மெய்ப்பிக்கும் வகையில் நமது ஆச்சார்ய வினோபாபாவே அவர்களும் 3-10-51-ல் தாம் ஆற்றிய சொற்பொழிவின் இடையே *"ஜைன சமூகம் எண்ணிக்கையில் சிறியதாயினும், தனிப்பட்ட சிறப்புடையதாயிருக்கிறது. அதனுடைய நிலை பாலில் சர்க்கரைக்கு ஒப்பானது. அது இந்தியக் கலாச்சாரத்தின் அளவைகளை உயர்த்தியுள்ளது. அது மதிப்பிடமுடியாத இலக்கியக் குவியலைப் பெற்றுள்ளது. அதனுடைய உயிர் அஹிம்ஸை என்னும் நறுமணத்தை உடைத்தாயுள்ளது. மகாத்மா காந்தியடிகள் பிரசாரம் செய்து வந்த அஹிம்ஸையின் தத்துவம் ஜைன அஹிம்ஸைக் கொள்கையே யாகும். இந்த அஹிம்ஸை தத்துவம் புதியதல்ல, ஆனல் பழமையானது-மிகமிகப் பழமையானது." என அறிவித்துள்ளார்.

மேலும், மகாத்மா காந்தியடிகளின் எண்ணத்தை நிறைவேற்றவே சர்வோதயா இயக்கத்தை ஆரம்பித்து நிலப்பங்கீடு சேவையும் செய்து வருகின்றார். இவர்தம் அறப்பணியை இன்று உலகெலாம் வரவேற்கின்றன.

22-11-51-ல் ரோம் நகரில் நடந்த ஐக்கிய நாட்டு உணவு விவசாய ஸ்தாபனத்தின் மகாநாட்டில் நமது உணவு மந்திரி கனம் கே. எம். முன்ஷி பேசும்போது, "நிலச் சீர்திருத்தப் பிரசாரம் செய்துகொண்டு கால்நடையாக இந்தியாவில் சுற்றுப்பிரயாணம் செய்து வரும் ஆச்சார்ய வினோபாபாவேவை உதாரணமாக

---

*இஃது 1951 நவம்பர் ஜினவாணி என்ற ஹிந்தி பத்திரிகையிலிருந்து மொழி பெயர்க்கப்பட்டது.

எடுத்துக்காட்டி, பாவேயின் தார்மீக யாகத்தின் விளைவாக எவ்வளவு ஜனங்கள் மனம் கரைந்து ஏக்கருக்குமேல் ஏக்கராக ஏழைகளின் வினியோகத்திற்காகப் பாவேயிடம் பூமிதானம் செய்துவருகிறார்களென்றும், இதுவரை ஆயிரக்கணக்கான ஏக்கர்கள் வந்து சேர்ந்துள்ளன என்றும் பாவேவின் சாத்வீக இயக்கம் நில விநியோகப் பிரச்சனையை புனிதமான மார்க்கத்திற்குக் கொண்டுவருகிற தென்றும். இது தெய்வீகம் பொருந்திய ஒரு பெரிய பரீக்ஷை இயக்கமென்றும் உலகமெங்குமே இம்மாதிரி உற்சாகத்தை ஊட்ட இந்த சர்வதேச ஸ்தாபனம் முன்வரவேண்டும்" என்றும் குறிப்பிட்டுள்ளார்.

19—11—51 தினமணி.

எனவே இத்தகையசிறந்த ஆத்மீகம் கலந்த பொதுவுடைமைத் தத்துவத்தை முதன்முதல் தோற்றுவித்த **ஆதிபகவனை** உலகறிய விழாக் கொண்டாடி, அச்சீரிய கொள்கையை நடை முறையில் கொண்டுவரும் ஆச்சாரிய விநோபாஜீயின் கோட்பாட்டினையும், தமிழ் நாட்டுத் தனிப் பெருந் தலைவர் திரு. வி. க. அவர்களின் மாசற்ற உள்ளத்திலே உருவாகி ஒளிரும் பொதுவுடைமைக் கொள்கையையும் ஆதரித்து,

> **" இயற்றலும் ஈட்டலும் காத்தலும் காத்த**
> **வகுத்தலும் வல்லது அரசு "**

என்ற திருக்குறள் அரசை நிலைநாட்டிச் சிறந்து வாழ்வோமாக.

> **" அருகன் அருளறம் பொருளறம் வேண்டும்**
> **ஆக்கத் தொழிலில் ஊக்கம் வேண்டும்**

இறப்பையும் பிறப்பையும் மறத்தல் வேண்டும்
ஈரம் சுரக்கும் வீரம் வேண்டும்
உலகொரு குலமெனும் உணர்வு வேண்டும்
ஊனக் கொலைபுலை உறங்கல் வேண்டும்
என்றும் பணிநினைந்தி யற்றல் வேண்டும்"

—"பொருளும் அருளும்" (திரு. வி. க.)

கதமொழி தீர்மின் கறுவுகடேய்மின் கருணைநெஞ்சோ
டிதமொழி கூறுமின் இன்னுயிர் ஓம்புமின் எப்பொழுதுஞ்
சுதமொழி கேண்மின் சுகமிக வேண்டில்துறவர் சொன்ன
வதமொழி யேன்மின் இவை சினனுர் திருவாய்மொழியே

—திருநூற்றந்தாதி.



"வாழ்க சமதர்மம்."



Printed at the B. N. Press, Mount Road, Madras—2.

# மதிப்புரைகள்.

" ஸ்ரீமான் ஸ்ரீபால் ஜீவகாருண்யக் கடலைக்கடந்து கரையேறியவர். தமிழகத்தைத் தம் அன்பாலும் பழங்கால ஜைனக் கொள்கையாலும் தாழாத் தமிழகமாக்கியவர். தாம் கொண்ட விரதமாம் பலித்தடை மசோதாவை நிறைவேற்றியவர். இவர் தம் எழுத்தும் சொல்லும் இனிமை மிக்கன. தம் அரிய பேச்சினால் மக்களைத் தம் வழிப் படுத்தும் வல்லுநர். ஸ்ரீ ஸ்ரீபால் செயற்கரியன செய்பவர். இப்பெரியார் இயற்றிய இச்சிறுமலர் பொன்னாலாகிய தாயினும் நறுமணமுற்றதாகவும் விளங்குகிறது. இந் நூல் வழிநிற்கும் மக்கள் உண்மையில் அற நெறிச் செல்வராவர். பலரும் பயில்க.''

**முத்தமிழ் 5—2—52.**

" இன்று உலகமே பிரமிக்கத்தக்க வகையில் பூமிதானயக்ஞம் ( நிலப்பங்கிடு ) செய்துவரும் ஆசார்ய வினோபாபாவேயின் சமதர்மச் செயலுக்கு ஆதாரமாகப் பண்டைய தமிழ் நூல்களினின்றும் பல மேற்கோள்களை ஆசிரியர் இச்சிறு நூலில் எடுத்துக் கொடுத்திருக்கிறார்' ஒருகாலத்தில் உணவுக்கும் உடைக்கும் வழியின்றி நன்மை தீமை என்ற பாகுபாடே இல்லாமல் மக்கள் அலைந்த காலத்து பல்வேறு திட்டங்களுடன் ஒரு புது சமுதாயத்தைத் தோற்று வித்த விருஷப தேவரைப் பற்றி யும் அவர் அருளிய அறங்களைப் பற்றியும் இதில் மேற்கோள்களுடன் விவரிக்கப் பட்டிருக்கிறது. நல்ல ஆராய்ச்சி நூல்,

**பாரத தேவி 12—2—52.**

" நூல் ஆராய்ச்சி முறையில் பாகுபாட்டமைப்பில் எழுதப்பட்டிருக்கிறது. கருத்துக்கள், பழய புதிய நற்சான்றுகளிலிருந்து வகையாய்த் திரட்டப்பட்டிருக்கின் றன. ஆசிரியப் பண்பு தோன்ற இச்சிறு நூல் இயன்றிருக்கிறது; எளிய தமிழ் நடையில் உருக்கமாக அமைந்துள்ளது.

சமணசமய நூற் கருத்துக்களும், சமண்பெரியோர் தொண்டுகளும், ஆசாரிய வினோபாபாவேயின் அரும்பணிகளும், உலக நன்மைக்குரிய பொருளாதார ஒழுக்க நெறிகளும் இதில் தெளிவாக்கப்பட்டிருக்கின்றன. கருத்துக்கள் பயன்படக்கூடியவை''

**'முல்லைக் கொடி' 10—4—52.**

" ஆதிபகவனும் ஆச்சாரிய வினோபாபாவேவும் என்ற புத்தகத்தில் இந்தியா வில் பூமிதான இயக்கத்தின் கர்த்தாவாக விளங்கி ஆடம்பர விளம்பரமின்றி உண்மையான உருவான சேவை செய்துவரும் ஆச்சாரிய வினோபாபாவே அவர் களின் அருந்தொண்டை ஸ்ரீபால் சமதர்மப் பணியாக வர்ணிக்கிறார். சமதர்மக் கொள்கை நம்நாட்டுக்குப் புதிதல்லவென்றும் எடுத்துக்காட்டுகிறார்.''

**'சென்னைச் செய்தி' ஜூலை, 1952.**

**புத்தகம் கிடைக்குமிடங்கள் :**

*Sri. N.* சிம்புமல் சௌக்கார்

*15/16,* பஜார் ரோட், மைலாப்பூர், சென்னை.

# அறநூற் பதிப்பகம்

**34, சுப்பிரமணிய முதலி வீதி,**

சென்னை-1.

ஜீவபந்து *T. S.* ஸ்ரீபால்

*132,* தங்கசாலை வீதி, சென்னை-1.

உமா பிரிண்டர்ஸ் சென்னை-1.